

பந்தௌ நாம ராம் ரகுபர் கோ ।
ஹேது க்ருஸானு பானு ஹிமகர் கோ ।।
பிதி ஹரி ஹர்மய பேத் ப்ரான் ஸோ ।
அகுண அனூபம் குண நிதான் ஸோ ।।

பாலகாண்டம் - 234-235

ராமசரித மானஸ் - துளஸிதாசர்

"நான் ரகுநாதனின் நாமத்தை வணங்குகிறேன். இந்த பவித்ர 'ராம' என்னும் நாமத்தில் அக்னி, சூரியன், சந்த்ரன் எல்லாமே அடங்கியிருக்கின்றன. இதுமட்டுமன்றி இந்தப்பெயரில் ர, ஆ, ம, ன்னும் பிஜாட்சர நாமத்தில் பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகிய மூன்று தெய்வங்களுடைய சிறப்பு அம்சமும் உள்அடங்கி இருக்கின்றது. இந்த நாமமானது வேதங்களின் உயிர் நாடி; நிர்குணமானது; உபமானமற்றது; நற்குணங்களின் இருப்பிடம். இத்தகு சிறப்பும், பெருமையும் கொண்ட 'ராம' நாமத்தை நான் வணங்குகிறேன்."

# ஸப்தகிரி

மார்ச் - 1996

தனிப்பிரதி ரூ. 2 மலர் 26 இதழ் 10

சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீமலையப்பசுவாமி (உத்ஸவர்) திருமலை.

முதல் உள்ளட்டை : தெப்போத்ஸவம் - திருமலை.

2-வது உள்ளட்டை : ஸ்ரீராமநவமி - ஸ்ரீகோதண்டராமசுவாமி திருக்கோயில் பிரம்மோத்ஸவம் - திருப்பதி.

பின்னட்டை : 'அலிபிரி' திருமலை அடிவாரம்

JAGADISH

# உங்களுடன்...

'இராமாயணத்தில் எந்தக் காண்டம் சிறந்து விளங்குகிறது? அக்காவியத்தில் நெஞ்சை நெகிழவைக்கும் காட்சி எது? உயர்ந்து நிற்கும் கதாபாத்திரம் யார்? அக்கதா பாத்திரத்தின் விஞ்சி நிற்கும் குணம் எது?' என்று பல கேள்விகளைக் கேட்டுக்கொண்டால், அது 'கற்கண்டின் எப்பகுதி மிகுதியாக இனித்திடும்' என்ற கேள்விக்கொப்ப விளங்கிடும். ஆம், இராமகாதையில் எல்லா நிகழ்ச்சிகளும், எல்லா கதைமாந்தர்களும், எல்லா குண இயல்புகளும் ஒன்றையொன்று மிஞ்சிடும் வகையில் தான் மிளிருகின்றன. கதையோ, கவிதையோ, காவியமோ அதில் உணர்த்தப்படும் செய்தி மனிதனின் அடிப்படை உணர்வினைத் தொடும் வகையில் அமைந்தால் அது காலத்தையும் இடத்தையும் கடந்து சிறந்திடும். அந்த வகையில் இராமாயணம் மனித வாழ்க்கையின் அடிப்படை இலக்கணமான 'தர்மம்' என்னும் உயர் பண்பின் பெருமையைப் பேசிடும், அதன் இன்றியமையாததை வலியுறுத்திடும் காவியமாகத் திகழ்கின்றது. இதனை,

> "யம் பாலயஸி தர்மம் த்வம் த்ருச்யாச நியமேனச ।
> ஸவை ராகவ சார்தூல தர்மஸ்த்வாம் அபிரக்ஷது ॥

என்று கோசலை இராமனிடம் கூறுவதிலிருந்து அறிந்து தெளியலாம். பொருள் இன்பம், வீடு என்னும் மூன்று புருஷார்த்தங்கள் அறத்தின்மீதே ஆதாரப்பட்டுள்ளன. காவிய நோக்கில், கதை நிகழ்ச்சிகள் பெரும்பாலும் வடநாட்டிலேயே நிகழ்ந்திருந்தா லும், காவியநாயகனான இராமனுக்கான கோயில்கள் தென்னிந்தியாவில்தான் மிக்கு உள்ளன என்பதைப் பார்க்கும்போது, இராமாயணம் எந்த அளவில் தென்னிந்தியரின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துள்ளது என்பது தெரியவரும். ஏனெனின் வேத ஸம்ஹிதையான இராமாயணச் செய்திகள் இம்மண்ணின் மாந்தர்களின் வாழ்க்கைக்கும், ஆத்மார்த்தமான இடையூறுகளுக்கும் - பிரச்சனைகளுக்கும் என்றென்றும் இடம், காலம், மொழி, இனம் கடந்த ஒரு வழி காட்டியாக - ஒரு தீர்வாக விளங்குகின்றன.

ஒரு நாட்டின் தலைவிதி அதனுடைய அரசியல், பொருளாதார, சமூகக் கோட் பாடுகளின் மீதே ஆதாரப்பட்டுள்ளது. இதற்கு நாடாளுபவரின் கடமையும், மக்களின் பங்கும் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதற்கு ஓர் உதாரணமாக தயரதன் ஆண் டிட்ட கோசலை நாட்டு வளத்தையும் நாட்டு மக்களின் வாழ்க்கைத் திறத்தையும் படம் பிடித்துக்காட்டிடும் பாலகாண்டத்துச் செய்திகள் திகழ்கின்றன.

இராமாயணம் தியாகத்தின் சீர்மையை, பொறுமையின் பெருமையை, சத்தியத் தின் சக்தியைப் படம்பிடித்துக் காட்டும் உயர் காவியமாகும். தந்தை சொல் காத்திட முடி துறந்திட்ட இராமன்; பாசத்தின் காரணமாக உயிர்விட்ட தயரதன்; தமையனுக்காக அரண்மனை வாசத்தைத் துறந்த இலக்குவன்; பழி துடைத்திட அரச வாழ்வை விலக்கிய பரதன்; கணவனுக்காக அரச போகங்களை உதறிய சீதை; என்று பல தியாக சீலர்களை இனம் காட்டும் நிகழ்ச்சிகளை அயோத்தியா காண்டம் கொண்டுள்ளது. நட்பின் மேன்மையை, பக்தியின் சிறப்பை, நீதியின் நேர்மையை

ஆரண்யா மற்றும் கிஷ்கிந்தா காண்டங்கள் படம் பிடித்துக் காட்டும். பக்தி நிலைகளிலே ஆண்டான் - அடிமை எனும் தாஸ பக்தியின் ஆற்றலை அனுமன் மூலம் விளக்கிடும் பெருமை கொண்டதாக சுந்தரகாண்டம் மிளிருகின்றது. வைணவ சமயத்தின் பெருமை பேசும் 'சரணாகதி'யின் அருமையினை, காமத்தின் இறுதி முடிவினை, 'செய்நன்றி'யின் சிறப்பினை, பொறுமையின் வெற்றியை, வீரத்தின் இலக்கணத்தை, தர்மத்தின் மாட்சிமையை யுத்த காண்டம் அழகாக விளக்கிக்கூறும்.

இராமாயணத்தில் எத்தனையோ கதை மாந்தர்கள் பலவகைகளில் பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வகையில் திகழ்ந்தாலும், பூர்ணாவதாரமான இராமன் தன் உபதேச மொழிகளாலும், தன்னுடைய இயல்புகளினாலும், தன் உருவத்தாலும் மற்றைய அவதாரங்களை விஞ்சி நிற்கின்றான். ஒரு பணக்காரனின் மரணம் ஓர் ஏழையை சிறிதும் பாதிப்பதில்லை. அதேபோன்று ஒரு ஏழையின் மரணம் ஒரு செல்வந்தனை நெகிழவைப்பதில்லை. ஆனால் அதேநேரத்து ஓர் ஏழையின் மரணம் மற்றொரு ஏழையினிடம் ஓர் அனுதாபத்தை ஏற்படுத்துகின்றது. இது ஒரு பொதுவான சமுதாயப் பிரதிபலிப்பு. அந்த வகையில் தயரதனின் மரணமோ, தனையனைப் பிரிந்த தாயான கோசலையின் துயரமோ, அரக்கனால் கவர்ந்து செல்லப்பட்டு உயிராகிய தன் கணவனைப் பிரிந்து வாடும் சீதையின் கண்ணீரோ, சீதைக்காகத் தன் உயிரைத் தந்திட்ட சடாயுவின் மரணமோ ஏற்படுத்தாத ஒரு மாபெரும் ஆத்மார்த்தமான ஒரு சோக உணர்வை இராமன் நம்மிடையே ஏற்படுத்திவிடுகிறான். ஏனெனில் இராமன் எல்லா உயர்குணங்களின் உறைவிடமாகத் திகழ்வதால்தான். இறையம்சமான இராமன் தன்னுடைய இறையாற்றலை சிறிதும் வெளிக்காட்டாது, ஒரு சாதாரண மனித நிலையில் இருந்தே இடர்பாடுகளை எதிர்கொள்வதால், நாளும் பிரச்சனைகளால் சூழப்பெற்றுள்ள சாமான்யர்கள் அவ் இராமன் மீது அவர்னையும் மீறி ஈடுபாடு கொள்வது என்பது தவிர்க்கமுடியாததாகி விடுகின்றது. 'நாளை நீ நாட்டின் தலைவன்' என்று சொன்னபோதும் 'நாளை நீ காட்டுக்குப் போகவேண்டும்' என்று கூறியபோதும், இராமன் காட்டிய உள்ளார்ந்த பொறுமையும், அமைதியும், தந்தை சொல் காத்திட அவன் காட்டிய தீவிரமும், சமுதாயத்தில் பெண்ணின் பங்கு பற்றியும், சமுதாயத்தின்பால் அடிமையாகும் மனிதனின் நிலை பற்றியும் அவன் அருளிட்ட தெளிவான அறிவுரைகளும், [illegible] இடம், கடந்து தூய அன்பின், பக்தியின் காரணமாக [illegible], சபரியையும், அனுமனையும், வீடணனையும், தன்னுடையவர்களாக ஆக்கிக்கொண்ட [illegible] பண்பும், நன்றியின் விளக்கமாக, கருணையின் ஊற்றாக, அன்பின் [illegible], பொறுமையின் பொருளாக, கொள்கையின் கோபுரமாக, இயா [illegible] செல்லும், செயலும், சிந்தனையும் தூயதாகக் கொண்ட அவன்தன் பெருமையும், குறைவான பேச்சு, ஆழமான சிந்தனை, புலனடக்கம் ஆகியன வழங்கிட்ட அவன்தம் ஏற்றமும் ஆகியவையே அவன் கதையை எவரும், எக்காலத்தும், எங்கும் தொடர்ந்து சுவைக்கப்பெற்று சிந்திக்க வைக்கின்றது. அதுவே நம்மை மனிதனாக வாழவைக்கும் வழிகாட்டியாகவும் விளங்குகின்றது. இம் மண்ணின் பெருமை பேசும் அவன்தம் நாமம் சொல்லி, அவனருள் பெறுவோமாகுக.



# பக்திப் பாவை வெங்கமாம்பா

திரு. வி. சக்திவேல் - தென்புத்தூர்.

திருப்பதி திருமலையைப் பற்றியும் அதன் ஆன்மீக பெருமைபற்றியும் அறியாமல் தமிழகத்தில் இருக்கமாட்டார்கள். ஓரிரு தடவையாவது திருப்பதி மலைக்குச் சென்று திருவேங்கடத்தானைத் தரிசனம் செய்யாத மக்கள் மிகவும் குறைவாகவே இருப்பர். திருப்பதி மலை எனப்படும் திருமலை மீது ஏறிச்செல்வோர் அங்கே வெங்கமாம்பா சத்திரம் என்ற ஒரு பழைய சத்திரத்தைக் காணத்தவறமாட்டார்கள்.

இன்று புதிது புதிதாகத் தோன்றும் நவீன சத்திரங்களோடு ஒப்பிடுகையில் வெங்கமாம்பா சத்திரம் மிகப்பழமையானதாகவும் வசதி குறைவானதாகவுமே இருக்கும். இருந்தாலும் கூட ஆந்திர நாட்டு மக்கள் குறிப்பாக தாய்மார்கள் அந்த வெங்கமாம்பா சத்திரத்தில் ஓர் இரவையாவது கழிப்பதை ஒரு புனித கடமையாகக் கொண்டுள்ளனர்.

திருமலையில் ஆண்டுதோறும் நடைபெறும் பிரம்மோற்சவ விழாவின் போது ஒரு நாள் விழாவில் வெங்கமாம்பாவுக்கென தனிச் சடங்குகளும் ஆராதனையும் நடத்துகிறார்கள். அந்த வெங்கமாம்பா யார்? அவர் ஒரு தெய்வமா? எதற்காக அவ்வித தெய்வீகச் சிறப்பும் பெருமையும் வெங்கமாம்பாவுக்கு இருக்கிறது.

வெங்கமாம்பா ஒரு தெய்வமில்லை. ஆனால் தெய்வீக அம்சம் நிரம்பிய ஒரு பெண்மணி. வெங்கமாம்பாவைப் பற்றித் தெரியாத மக்களே ஆந்திர தேசத்தில் இருக்கமாட்டார்கள். ஆண் மக்களைவிட பெண் மக்களுக்கு அங்கே வெங்கமாம்பாவின் பெருமையும் சிறப்பும் தெரியும். ஒரு மனிதன் மோட்சமடைய வேண்டுமா? மோட்சத்தை இகலோக வாழ்க்கையிலேயே பெற வேண்டும் என்பதற்கான வழியை தமது ராஜயோகம் சாகரம் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஏராளமான பக்திநெறிப் பாடல்களையும் தனி காவியங்களையும் இயற்றிய வெங்கமாம்பா, நமது தமிழகத்து ஆண்டாள் ஔவை பிராட்டியார் போன்ற ஆன்மீக இலக்கியக் கவியரிசியாகத் திகழ்ந்து மக்களின் உள்ளங்களில் எல்லாம் கோயில் கொண்டு இருக்கிறார். திரிகொண்டா என்பது அவர் பிறந்த ஊராகையால் பிறந்த ஊரையும் சேர்த்து திரிகொண்ட வெங்கமாம்பா என்று மக்கள் அழைப்பார்கள்.

வெங்கமாம்பா ராமகிருஷ்ண பரமஹம்சர் வாழ்ந்த காலம் என்று கருதப்படுகிறது. அதாவது கி.பி. 1840 ஆண்டு காலத்தில் வாழ்ந்தார் என்று தெரிகிறது. வெங்கமாம்பாவின் குடும்பத்தினர் வசிஷ்ட மகாமுனிவரின் வழிவந்தவர்கள் எனக் கருதப்படுகிறது. சித்தூர் மாவட்டத்தில் உள்ள வாயில்பாடு என்ற ஊருக்கு நான்கு மையில் வடக்கே அமைந்திருக்கிறது வெங்கமாம்பா அவதரித்த திரி கொண்டா என்ற கிராமம். வசிஷ்டரின் வம்சத்தை கனவி வம்சம் என்று கூறுவார்கள். கனவி வம்சத்தை சேர்ந்த நந்தவர்கா சமயப் பிரிவை சார்ந்த கிருஷ்ணய்யா என்னும் வைதீக பிராமணரே வெங்கமாம்பாவின் தந்தையார். வெங்கம்மாவின் தாயார் மங்கம்மா என்பதாகும்.

அக்காலத்தில் பால்ய மணம் வழக்கத்திலிருந்தது. அறியாத குழந்தை பருவத்திலேயே திருமணம் முடித்துவிடுவது அந்நாளைய வழக்கம். வழக்கம் போல வெங்கமாம்பாவுக்கு குழந்தை பருவத்திலேயே திருமணம் முடித்து விட்டனர். வெங்கமாம்பாவிற்கு திருமணம் முடிந்த சில நாட்களிலேயே அவர் கணவனை இழக்க வேண்டிய நிலைக்கு உள்ளானதால் அவருடைய கணவன் யார் என்ற தகவல் தெரியவில்லை.

சின்னவயதிலேயே வெங்கமாம்பா முழுமையாக ஆன்மீக அறிவை பெற்றிருந்தார். அரிய நூல்கள் கற்றுத் தேர்ந்தவர் என்று தெரிகிறது. மணமான பெண்கள் கணவனை இழந்து விட்டால் சிகையை களைந்து வெள்ளுடை தரித்து விதவைக் கோலம் கொள்ள வேண்டியது அந்நாளைய வழக்கம். வெங்கமாம்பா சிறுமியாக இருந்ததால் உடனே அவருக்கு விதவைக் கோலம் கட்ட அவரது பெற்றோர்கள் விரும்பவில்லை. பருவ வயதை

எய்திய உடனே பெற்றேர்கள் சும்மா இருந்தாலும் ஊர் மக்கள் சும்மா இருக்கவில்லை. விதவைக்கோலம் வெங்கமாம்பாவிற்குச் சூட்ட வேண்டும் என்று ஊர்மக்கள் நிர்ப்பந்தம் செய்தார்கள். அவ்வாறு செய்யத் தவறினால் சாதி பிரதிஷ்டை செய்வது என்று மிரட்டினார்கள்.

அவ்வூர் மடாதிபதி பெரியவர் வெங்கமாம்பாவுக்கு விதவை கோலம் சூட்டவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்தார். அதற்கு முன்னதாக 'அடியாளின் ஐயம் ஒன்றை அகற்ற வேண்டும்' என்று வெங்கமாம்பா பணிவுடன் கேட்டுக்கொண்டாள்.

'என்ன ஐயம்' என்று மடாதிபதி கேட்டார்.

'நான் கணவனை இழந்தவள்; ஒரு விதவை நெறிமுறைகளை அனுசரித்து நான் விதவையாக வாழவேண்டும் என்பதை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். அதுதான் நான் அறிந்த சாத்திர நெறிமுறை. கணவனை இழந்த பெண், சிகை நீக்கி தன்னை அலங்கோலம் செய்து கொண்டு வெள்ளுடை தரித்துதான் வாழவேண்டும் என்று எந்த சாத்திரத்தில் எந்த இடத்தில் கூறி இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். இந்த ஐயத்தில் எனக்கு தெளிவுரை ஏற்பட்டால், இக்கணமே நான் சிகை நீக்கி வெள்ளுடை தரித்து வாழத்தயார்' என்று வெங்கமாம்பா கூறினாள்.




'என்னிடம் சாத்திர விளக்கம் கேட்பதற்கு நீ யார்? உனக்கு என்ன தகுதி இருக்கிறது. நான் ஒரு மதத்தலைவர். என் கட்டளைப்படி நடக்கவேண்டிய கடமை உனக்கு இருக்கிறது. என்னுடைய வாக்கு கடவுளுடைய வாக்குக்குச் சமம். என் உத்திரவு மீறுகிறுய் என்றுல் கடவுளையே உதாசீனப்படுத்துகிறுய் என்று அர்த்தம். உடனே சிகை நீக்கி வெள்ளுடை பூணுவாய்' என்றுர் மடாதிபதி.

'சுவாமி! என்னை மன்னிக்க வேண்டும். தங்களுடைய வாக்கை இறைவன் வாக்காகவே மதிக்க நான் தயார். ஆனால் எனக்கு என் ஐயத்துக்கு விளக்கம் தேவை' என்று பிடிவாதமான குரலில் கூறினாள் வெங்கமாம்பாள். மடாதிபதி ஆத்திரமும் ஆவேசமும் அடைந்தார். அருகில் இருந்த ஏவலாட்களை நோக்கி கண்களை காண்பித்தார்.

இரண்டு பேர் வெங்கமாம்பாவைப் பிடித்துக் கொண்டார். ஒருவர் சிகை அலங்கார தொழிலாளியை அழைத்து வந்தார். நிர்ப்பந்தமாக வெங்கமாம்பாவின் சிகை அகற்றப்பட்டது. வெங்கமாம்பா பதறினாள்; கதறினாள். அவரை விடவில்லை. அவள் சிகையை மழித்துவிட்டு விட்டார்கள்.

மடாதிபதி தங்கியுள்ள இடம் ஓர் ஆற்றங்கரை. வெங்கமாம்பா மடாதிபதியின் ஆட்களிடம் இருந்து விடுபட்டப் பிறகு யாரையும் தூஷிக்கவும் இல்லை. வானத்தை நோக்கி இருகரங்களையும் நீட்டி இஷ்ட தெய்வம் கண்ணபிரானை தியானித்து 'உண்மை பக்தையான என்னை கைவிட்டுவிட்டாயா?' என்று கூறினார்.

பிறகு அமைதியாக ஆற்றில் இறங்கினாள். கண்களை மூடியவாறு கண்ணனை பிரார்த்தித்து நீரில் அமிழ்ந்தாள். பிறகு எழுந்து நின்றால் என்ன அதிசயம்; என்ன அற்புதம். மடாதிபதிக்கும் அவர்கள் ஆட்களுக்கும் அங்கு குழுமி நின்ற ஊர் பிராமணர்களுக்கும் தங்கள் கண்ணையே நம்பமுடியவில்லை. வெங்கமாம்பாவின் சிரசில் சிகை அகற்றப்பட்ட குறியே இல்லை. முன்பு இருந்ததைக் காட்டிலும் அடர்ந்து செழித்துக் கருத்து அற்புதத் தோற்றமாக சிகை பிரகாசித்தது. மடாதிபதி பிரமித்து செயலிழந்த நிலையில் தம் ஆசனத்தைவிட்டுக் கீழே இறங்கி வந்தார். ஆற்றிலிருந்து ஈரம் சொட்ட சொட்ட மேலேறி வந்துகொண்டிருந்த வெங்கமாம்பாவின் காலடியில் வீழ்ந்து வணங்கினார்.

'அம்மா என் பிழையை பொறுத்தருள்வாய். உன்னை சாமான்ய பெண்ணாக நினைத்து இழிவு செய்துவிட்டேன். நீ தெய்வாம்சம் பொருந்தியவள். ஜெகன்மாதா! என்னை மன்னித்துவிடு' என்றார். அங்குள்ள கூட்டம் அப்படியே தரையில் வீழ்ந்து வெங்கமாம்பாவைப் பணிந்து நின்றது.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு வெங்கமாம்பாளின் புகழும் பெருமையும் ஆந்திரபிரதேசம் முழுவதும் பரவியது. அன்றுடம் வெங்கமாம்பாவின் ஆசியை பெறுவதற்கு மக்கள் கூட்டம் கூட்டமாக வரத்தொடங்கிவிட்டார்கள். வெங்கமாம்பா வெறும் பக்தையாக மட்டுமே திகழவில்லை. தாய்குலத்தை சீர்திருத்த வந்த புரட்சிப் பெண்ணாகவே திகழ்ந்தார்.

சித்தூர் மாவட்டத்தில் மதனபல்லி என்று ஒரு நகரம் இருக்கிறது. அங்கே ரூபாவதார சுப்ரமணிய சாஸ்திரி என்ற ஆன்மீகச் சான்றோர் அக்காலத்தில் வாழ்ந்து வந்தார். அவரைத் தனது குருவாக வரித்து கொண்டார். அவர் மூலமாக ஞான தீட்சையும் பெற்றார்.

உள்ளூரில் ஹனுமான் திருக்கோயில் இருந்தது. அந்த கோயிலின் கருப்பக்கிரகத்தை யொட்டி ஒதுக்குப்புறமான ஓரிடம் இருந்தது. வெங்கமாம்பா அந்த இடத்தில் ஏகாந்தமாக அமர்ந்து தியானத்தில் ஆழ்வதை வழக்கமாகக் கொண்டார். ஊன் உறக்கம் இன்றி ஒரே நிலையில் அந்த இடத்தில் நாட்கணக்கில் அமர்ந்துவிட்டார்.

கோவில் பூசாரி முதலில் வெங்கமாம்பா கோயிலுக்குள்ளேயே தங்கிவிட்டதைக் கவனிக்கவில்லை. ஒருநாள் தற்செயலாக வெங்கமாம்பாவை பூசாரி பார்த்துவிட்டார். உடனே அந்த இடத்தைவிட்டு வெளியே றிவிட வேண்டுமென்றும் வழிபாடு நேரம் தவிர மற்ற நேரங்களில் கோயிலில் தங்கக்கூடாது என்றும் எச்சரிக்கை செய்தார். யோக தியானத்தில் ஆழ்ந்திருந்த வெங்கமாம்பாளின் காதுகளில் பூசாரி சொன்னது விழவில்லை. ஆதலால் கண்களை மூடியவாறு தான் இருந்த நிலையிலேயே இருந்தார்.

வெங்கமாம்பா வேண்டுமென்றே தன்னை அலட்சியம் செய்வதாக பூசாரி நினைத்துவிட்டார். எனவே வெங்கமாம்பாவை தாறுமாறாக ஏசிபேசி முரட்டுத்தனமாக அவரைக் கோயிலுக்கு வெளியே கொண்டு சென்று விட்டுவிட்டார். இறைவன் சன்னிதானத்தில் ஞானதியானத்தில் ஒரு பக்தை அமர்ந்து இருப்பது கூடவா குற்றம் என்று வெங்கமாம்பா வெதும்பினார்.

சொந்த கிராமத்தில் மன நிம்மதி கிடைக்காததினால் அந்த கிராமத்தை விட்டே புறப்பட்டுவிட்டார். அப்போது வெங்கமாம்பாவின் பக்கத் துணையும் இல்லை. அவர் பெற்றோர்கள் காலமாகி விட்டார்கள். பிறகு திருமலைக்குப் புறப்பட்டார். திருப்பதி திருமலை என்று அழைக்கப்படும் அந்த திவ்விய ஸ்தலம் அக்காலத்தில் வெங்கிடாசலம் என்ற பெயரினாலேயே அழைக்கப்பட்டது. வெங்கிடாசலத்தின் மேல் ஏறிச் சென்று வெங்கிடாசலபதியை தரிசிக்கசென்றபோது எதிர்பாராத அதிசயம் ஒன்று அவருக்கு காத்திருந்தது. வெங்கமாம்பாவின் புகழ் தேவஸ்தானத்தை நிர்வகிக்கும் நிர்வாகிகள் ஏற்கனவே நன்கு அறிந்து இருந்தனர்.

வெங்கமாம்பா சற்றும் எதிர்பாராத நிலையில் வெங்கிடாசலத்திற்கு விஜயம் செய்து இருப்பது கிடைத்தற்கரிய பெரிய பேறு என்று கருதினர். கோவில் மரியாதையுடன் வெங்கமாம்பாவுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. வேங்கடநாதனை வசதியாக தியானிப்பதற்கு ஏற்பாடுகள் செய்துகொடுத்தார்கள்.

வெங்கமாம்பா திருமலையிலேயே தங்கி இருக்க விரும்புவது அறிந்து ஆலய நிர்வாகிகள் பெருமகிழ்ச்சி அடைந்து வெங்கமாம்பா எத்தனைக் காலம் வேண்டுமானாலும் தங்கி இறைப்பணி யாற்றலாம் என்று தெரிவித்த

னர். அவரும் நிர்வாகிகள் ஏற்பாடு செய்து தந்த ஆசிரமத்தில் தங்கி தமது விருப்பம் போல நிமமதியாக இறைவழிபாட்டினை நிகழ்த்தினார்.

அங்குத் தங்கி இருந்தபோது தான் அவருக்குப் பெரும் புகழைத் தந்த வெங்கிடாசல மகாத்மியம் என்ற காவிய நூலை இயற்றினார். பிறகு அவருடைய இலக்கியச் சிறப்பு எங்கும் பரவியது. ஆலய நிர்வாகிகள் வெங்கமாம்பா நிம்மதியாக இருக்க பல வசதிகள் செய்து தந்தனர். வெங்கமாம்பா ஆலய நிர்வாகிகளுக்கு வேண்டுகோள் ஒன்று விடுத்தார். வெங்கமாம்பா ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் தனிப்பட்ட முறையில் வேங்கடேசப்பெருமாளுக்கு ஆராதனை செய்வதற்கு உரிமை வேண்டும் என்று அவர் வேண்டுகோள் விட்டார்.

அவரது கோரிக்கைபடியே தனி ஆராதனைக்குக் கோயில் நிர்வாகிகள் ஏற்பாடு செய்து தந்தனர். என் வாழ்நாள் முடிந்து விட்டாலும் என்பெயரால் இந்தத் தனி ஆராதனை தொடர்ந்து நடக்க வேண்டும் என்ற வெங்கமாம்பாவின் விருப்பமும் ஆலய நிர்வாகிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

வெங்கமாம்பாவின விருப்பம் இன்றைக்கும் தொடர்ந்து நிறைவேற்றப்பட்டு வருகிறது. வெங்கமாமபாவின் பெயரால் தனி ஆராதனையும் நடைபெற்று வருகிறது. வெங்கிடாசலத்தில வெங்கமாமபாவிற்கு அமைந்த நிம்மதியான வாழ்க்கை முறைக்கு திடீரென சோதனை ஏற்பட்டது.

ஆலயத்தில் திடீரென பழைய நிர்வாகிகள் மாறிப் புதிய நிர்வாகிகள் வந்தனர். பழைய நிர்வாகிகளுக்கு இருந்த தெய்வ பக்தியும் இங்கித இயல்பும் புதிய நிர்வாகிகளுக்கு இல்லை. ஆலய கணக்கில் வெங்கமாம்பாவுக்காக ஒரு குறிப்பிட்ட செலவு செய்யப்படுவதும் வெங்கமாம்பாவிற்கு ஆலயத்தில் தனிமரியாதையும் மதிப்பும் இருப்பது புதிய நிர்வாகிகளுக்குப் பிடிக்கவில்லை. வெங்கமாம்பாவுக்காக ஆலய பணத்தை செலவிடுவது வீண் என்று அந்த செலவை நிறுத்தினர். பிறகு படிப்படியாக ஆலயத்தில் இருந்த வெங்கமாம்பாவின் மதிப்பும் மரியாதையும் செல்வாக்கும் சீர்குலைக்கப்பட்டது.

ஆலயத்திற்குச் சொந்தமான குடியிருப்பில் இருந்து உடனே வெளியேறிவிட வேண்டும் என்று ஒருநாள் புதிய ஆலய நிர்வாகிகள் உத்திரவு இட்டனர். வெங்கமாம்பா வெளியேறுவதற்குக் கால அவகாசமும் தராமல் ஒருநாள் அவரை பலவந்தமாக வெளியே அனுப்பி குடிஇருப்பின் கதவை மூடிவிட்டனர்.

எந்த வெங்கடேச பெருமானை சதம் என்று நம்பி வந்து அடைக்கலம் புகுந்தாரோ அந்த வேங்கடவனின் சன்னதியில வெங்கமாம்பாஅனாதையாக நிற்க வேண்டி வந்தது. வெங்கமாம்பா யார் மீதும் கோபப்படவிலலை. பெருமாள் தனக்கு அளித்திருக்கும் ஒரு சோதனை என எண்ணி மனத்தை தேற்றிக்கொண்டு வெங்கடசலத்தை விட்டு புறப்பட்டு விட்டார்.

மனித சஞ்சாரம் அதிகம் இல்லாத இயற்கை எழில் உள்ள துமுலுருகோணம் என்ற இடத்துக்கு வந்து சேரந்தார் வெங்கமாம்பா. அந்த இடத்தின் சூழ்நிலை அவருக்கு மிகவும் பிடித்து இருந்தது. தமது விருப்பம் போல யோகநிஷ்டையில் ஈடுபட்டு இறைவனை வழிபட்டும், பல கவிதைகளையும் சில காவியங்களை செய்தும் மகிழ்ந்தார். பல பக்தி நெறி நூல்களையும் இயற்றினார். தமது வாழ்க்கையை நிம்மதியாக கழித்தார் வெங்கமாம்பா.

சாமான்ய கல்வியறிவு படைத்தவர்களுக்கு விளங்கக்கூடிய பக்தியறிவு நூல்கள் மட்டுமின்றி பக்திநெறி சொட்டும் நாடகங்களையும் இயற்றினார் வெங்கமாம்பா. பாகவத புராணம் என்பது அவர் எழுதிய புகழ் பெற்ற நூல்களில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அவருடைய நூல்களில் சிறப்பானவை 'ராஜயோக சாகரம்', 'வசிஷ்டராமாயணம்' என்பதாகும்.

சாமானிய மக்களைப்போல் இவர் மரணமடையவில்லை என்ற விஷயத்தில் எங்கும் ஒன்றுபட்ட கருத்து நிலவுகிறது. மானிட உடலுடனேயே கண்ணபிரானுடன் இரண்டறக்கலந்து விட்டார் என்றே மக்கள் நம்புகின்றனர். அவர் எவ்வாறு மறைந்தால் என்ன? வாழ்ந்த போது பரிசுத்தமான ஆன்மானுபூதிச் செல்வச்சிறப்புடன் ஞானக்களஞ்சியமாக இருந்து பக்தி நெறியை உலகத்தில் பரப்பி வந்தார் என்பதுதான் முக்கியமான விஷயமாகும்.



# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## சே



சேக்கள் - எருதுகள்
சேக்கை - படுக்கை
சேட்டை - மூதேவி-மூத்ததேவி, முதற் பிறந்தவள்
சேடம் - மிச்சம்
சேட்பட்டயா மங்கள் - நீண்டயாமங்கள்
சேட்பாலதூழி - சேண்-அதிதூர மான, பாலது-ஸ்வபாவத் தையுடைய, ஊழி-காலம்.
சேட்பால்பழம் பகைவன் - சிசுபாலன்; சேண்-மிகுதி, பால்-ஸ்வபாவம், பழம் பகைவன்- வழிப்பகைவன், வழிவழியாய் பரம்பரை யாய் வந்த பகைவன் சிசு பாலன்.
சேடர் - இளைஞன்; முன்னோர்
சேடு - திரட்சியும், இளமையும், தளிரும்
சேப்பூண்டசாடு - எருதுகள் பூட்டின வண்டி
சேமம் - சேமத்தளிகை; தெளிகை; ாறு; க்ஷேமம்
சேமம் சாற்றி - சலமைன்றிக்கே பண்ணி
சேய்த்தீர்த்தம் - பெரிய தீரத்தம்; தூர மாய் மிகவும் தூய்மையா யிருக்கை
சேய்த்து - தூரத்திலுள்ளது.
சேய்முகட்டுச்சி - ஓங்கியிருந்துள்ள சிகரத் தில் உச்சி
சேயரிக்கண் - சிவந்த வண்டு போன்ற கண்
சேயரி - செவ்வரி; குற்றம்
சேயனென்னும் திரேதைக்கண் - திரேதாயுகத்தில் எம்பெரு மான் சிவந்த அடி யையுடையவனாய் இருப் பானாம். அக்காலத் தில் புருஷர்கள் ராஜஸ குணம் நிறைந்தவர்க ளாயிருக்கையாலே சிவப் பிலே ருசி உண்டாயிருக் கும். அந்த ருசிக்கு ஏற்ப சிவந்த வடிவைக் கொண்டு முகம் காட்டுவனாம் எம்பெ ருமான்.
சேவதக்குவார் - எருதுகளை வசப்படுத்து கைக்காக அவற்றின் செருக் கைக்குலைக்கும் நீசஜாதி யர்
சேவதக்குகை - மாட்டுக்கு விதை அடிக்கை
சேவல் - ஆண் பறவை; காவல்; சேறு
சேழ் - நெடுமை
சேற்றள்ளல் பொய்நிலம் - குழைந்தசேறு போன்ற ஸம்ஸாரம்
சேற்றுத்தாமரை - வறள் தாமரையில்லாமல் சேற்றிலே செழித்தவரும் தாமரை. வானமாமலை திவ்யதேசத்து குளத்தின் பெயர்.
சேற்றேருழவர் - மிக்க சேற்றிலே ஏரை நடத தவல்ல உழவர
சேறூர்சுனை - சேறு நிறைந்த சுனை
சேறுதோய்ந்து கழுவினவர்கள் - ஸம்ஸாரிகளாய்ப் பிறந்து பிறவித்துயர் நீங்கப் பெற்று மோக்ஷத் திலே இச்சையுடையவராய் ஆனவர்கள்
சேறையம்மான் - திருச்சேறை என்ற திவ்ய தேசத்து எம்பெருமானின் பெயர்
சேனைக்கால் - மங்கள ஆரத்தி குடம் வைக்கும் பீடத்தின் பெயர்.

## சொ

சொக்குப்பொடி - சொக்கவைக்கும் மயங்க வைக்கும் பொடி, சுக்குப் பொடி என்றும் கூறுவர்.

சொட்டை - ஆயுதம், வாள்; நாதமுனிகள் திருவம்சத்தின் பெயர்.

சொட்டை மெத்தை - பெருமாளை வாகனம் கேடயம் முதலியவற்றில் வைத்துக் கட்டும் இரும்புக் கம்பியும் பட்டுக்கயறும்

சொட்டை முட்டி - கத்தி பிடி

சொப்பட - நன்றாக

சொப்பன - நன்றாய்

சொரிகின்றது - பொழிகின்றது

சொரிதல் - சுரத்தல்

சொல்திறம் - சொல்வரிசை; சொல்மாலை

சொல்நேர்ப் பட்ட - சொல் வாய்ப்புடைய

சொப்புகை - அடிக்கை

சொல்லுரும்பர் - மந்திரி

சேயிழையீர் - சேய்-அழகு, இழை-ஆபரணம், அழகிய ஆபரணங்களைப் பூண்டவர்களே!

சேயூழியான் - செய்த ஊழி, படைத்த உலகம். அதிலுள்ளவன். செய் சேய் என்று நீண்டிருக்கிறது.

சேர்க்கை - ஒன்று சேரு; சேர்க்கையாவது அழித்தல்-ஸம்ஹாரம்

சேர்க்கைப் பல்லி - நிலைப்பல்லி; சேர்க்கைப் பல்லியானது ஒரு இடத்தில் பலகாலும் சொல்லிக்கொண்டிருக்கும்

சேர்கொடான் - அகப்படவிடான்; சேரக் கொடான்.

சேர்த்தி - சேரவைத்து; சாத்தி; ஸமர்ப்பித்து

சேர்ப்பன் - நெய்தல் நிலத்தலைவன்; துறைவன்

சேர்ப்பால் - குழம்புப்பால்; ஏலம் முதலியவைகள் சேர்த்துக் கெட்டியாய் குழம்பு போலே காய்ச்சின பால்

சேரபாண்டியன் - திருவபிஷேகம்; க்ரீடம்; நம்பெருமாளது திவ்ய சிங்காசனத்துக்குப் பேர். நம்பெருமாள் கோயிலாழ்வார் நின்றும் புறப்பட்டருளி பெரிய திருமண்டபத்திலே சேர பாண்டியனிலே நாய்ச்சியாரோடே கூட இருந்து நினைப்பிட்டது என்றால் அதுதப்பாது நடக்கும் என்பர்.

சேர்விடம் - நித்யவாசம் பண்ணுகிற இடம்

சேர்வுற்று - வந்துகிட்டி

சேர்வை - சேர்க்கை

சேர்வைகாரன் - மேளக்காரன்

சேரிகையேறும் பழி - ஊரார் கையெடுத்துச் சொல்லும் பழி

சேலும் கயலு- மிடுகை - கண்ணாலே இலச்சினையிடுகை, சேலும் கயலும் மீன். அதுபோன்ற கண்ணாலே பார்க்கை

சேவலம் - கல்வி, செல்வம்

சேவடி - செவ்விய அடி

சேவடிக்கிண் கிணி - கால் சதங்கை

சொருகி நிற்கை- உள்ளடக்கி நிற்கை

சொல்லகிற்கில் - சொல்லில்

சொலம் - மது; புகழ்; வார்த்தைகள்; நெல்

சொல்லமை பாட்டு - சொல்லும் பொருளும் நிறைந்த பாட்டு,

சொல்லவா - சொல்லட்டுமா

சொல்லறம் - சொல்லால் தருமம் செய்தல்

சொல்லார வாழ்த்தி - பொருள். நிறையும்படி வாழ்த்தி

சொல்லான் - சொல்லப்படுகிறவன்; திருநாமத்தையுடையவன்

சொல்லிற்றுக் கெல்லாம் - சொன்னதுக்கெல்லாம்

சொல்லுயர்ந்த நெடுவீணை - நாதம் மிக்கிருக்கையும் இசைநீண்டிருக்கையும்; இசை நீண்டிருக்கையாவது அக்ஷரம் நரம்பில்லாதபடி கரைந்து இசையாயிருக்கை.

சொலவு - வார்த்தை

சொற்பாடு - அசைச்சொல்

சொன்னாற் போலே - சொன்னவுடனே

சொற்கம் - முலை; சுவர்க்கம்

சொற்பம் - சோம்பல்

சொன்றி - சோறு

## சோ

சோணையிரம் கொண்டான் - பெருமாளுக்குத் திருமஞ்சன காலத்தில் உபயோகிக்கும் ஆயிரம் கண்ணுடைய

| | |
|---|---|
| | தட்டு. (ஸஹஸ்ரதாரை - சல்லடை.) |
| சோணை | - விடாதேபெய்யும் மழை; திருவோணம் |
| சோத்தம் | - அஞ்சலி |
| சோத்தியம் | - சந்தேகம்; ஆக்ஷேபம் (மறுப்பு) |
| சோதிக்கின்றான் | - ஆராயாநின்றான் |
| சோதி | - திருமேனி; காந்தி; சுவாதி நட்சத்திரம் |
| சோதியகலம் | - புகரையுடைய திருமார்பு |
| சோதி வட்டம் | - ஜ்யோதிர் மண்டலம் |
| சோப்பூண்டு | - அடியுண்டு; சோப்பு-அடி |
| சோமி | - துர்க்கை |
| சோமு | - ஸோம யாகம் |
| சோர்ந்து | - தளர்ந்து |
| சோரன் | - திருடன் |
| சோருகை | - திருடுகை |
| சோல்வான் | - திருடுகைக்காக; திருடனாய்த்திருட; சோராதபடி கொள்ளுகைக்கு |
| சோலை செய்தல் | - சோலைபோல தழைக்கச் செய்தல் |
| சோலை பார்ப்பாரைப்போல | - சோலைபார்க்கை-நன்கு ஒவ்வொன்றாய் கவனியாமல் மொத்தமாய் மேலெழுப்பார்ப்பாரைப் போலே |
| சோலைமலை | - திருமாலிருஞ்சோலை மலை என்ற திவ்யதேசம். சோலைநிறைந்த மலை |
| சோளேந்திரசிங்கன் | - பெரிய பெருமாள் ஆனை; பட்டத்து ஆனைக்குப்பெயர் |
| சோழக்கோனார் | - சோழமன்னர் |
| சோற்று | - சௌரியம் |
| சோற்றுப்பருப்பதம் | - சோறு மலையாகக் குவிந்திருப்பது |
| சோறு | - நல்லதோர் சோறு - தாய் பிள்ளைக்கு இடும்சோறு நல்லதோர் சோறு. |
| சோறுதல் | - சுவறுதல்; முடிதல் |

## ஞ

| | |
|---|---|
| ஞாதிப்பகை | - குடிப்பகை |
| ஞாயிறு | - சூரியன்; உலகு |
| ஞான்று | - நாள், காலம் |
| ஞானத்துறை | - ஞானமாகிறதுறை; தீர்த்தம் |
| ஞானவீதி | - பக்திரூபஞான விதாநம் பண்ணுகிற சாஸ்திர மரியாதை |
| ஞானவேதியன் | - வேத வேத்யன்; வேதங்களால் அறியத்தக்கவன் |
| ஞானி | - ஞானம் நிரம்பப்பெற்றவர். |

***************

# ஸ்ரீகோதண்டராம சுவாமி கோயில், திருப்பதி.

| | | |
|---|---|---|
| காலை 5-00 முதல் காலை 5-30 வரை | - | சுப்ரபாதம் |
| காலை 5-30 முதல் காலை 8-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை 8-00 முதல் காலை 8-30 வரை | - | தோமாலா (ஏகாந்தம்) |
| காலை 8-30 முதல் காலை 9-00 வரை | - | ஸஹஸ்ரநாம அர்ச்சனை (ரூ. 2/- நபர் ஒருவர்க்கு) |
| காலை 9-00 முதல் காலை 9-30 வரை | - | முதல் மணி, பலி |
| காலை 9-30 முதல் காலை11-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| காலை11-00 முதல் காலை11-30 வரை | - | 2-வது மணி |
| காலை11-30 முதல் மாலை 4-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 4-00 முதல் மாலை 6-00 வரை | - | ஸர்வ தரிசனம் |
| மாலை 6-00 முதல் இரவு 7-00 வரை | - | இரவு கைங்கர்யங்கள், இரவு மணி |
| இரவு 7-00 முதல் இரவு 8-40 வரை | - | ஸர்வ தரிசனம் |
| இரவு 8-40 முதல் இரவு 9-00 வரை | - | ஏகாந்த சேவை |

குறிப்பு : (சனிக்கிழமைகளிலும், புனர்வசு நட்சத்திர நாளிலும் மேற்கூறிய நிகழ்ச்சிகளில் சிறிதே மாற்றம் இருக்கும்.)

# "குலசேகராழ்வார் போற்றும் திருவேங்கடமாமலை"

டாக்டர். A.V. ரெங்காச்சாரியார் - ஆழ்வார்திருநகரி.

மாசிப் புனர்பூசத்தில் அவதரித்த குலசேகரர் "வானாளும் செல்வமும், மண்ணரசும் யான் வேண்டேன்" என்று அரச வாழ்வைத் துறந்து ஆழ்வாரான உத்தமர்: பாகவத சேஷத்வத்தில் ஈடுபடத்துடித்தவர். திருவரங்கனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்தவர். திருவேங்கடமலையில் தமக்குள்ள ஈடுபாட்டைப் பத்துப்பாசுரங்களால் மனமுருகிப்பாடி, அம்மலையுடன் தொடர்புள்ளதொரு பிறவியை இவர் வேண்டிப் பாரிப்பதை இங்கு அனுபவிப்போம்.

## 'கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே'

மண்ணில் வாழ்வதைவிட, வேங்கடமலையில் வாழ்வு கிடைக்குமானால், அறிவற்ற திர்யக்ஜாதியாகப் பிறப்பதும் தமக்கு மகிழ்ச்சி தரும் என்கிறார். 'ஊன்மல்கி மோடு பருப்பர்' - என்றவாறு உடல் தடித்து, உயிரின் விவேகத்தை மனிதப்பிறவி கெடுத்து விடுகிறது. பிறந்தால் ஏறேழும் வென்றடர்த்த எந்தையான திருமாலுக்கு அடிமை செய்யவேண்டும். மனிதப்பிறவியில் அடிமை செய்தால் செருக்கு உண்டாகலாம். அதனால் மனிதப்பிறவியின்றி ஒரு பறவையாக - குருகாகப் பிறவி எடுத்தாலும் போதும் என்கிறார் ஆழ்வார். இங்கு வாழ்வு என்ற சொல், கோனேரி வாழ்வே வாழ்வு என்று அழுத்தமாகக் குறிப்பிடும் வேங்கடமலையில் புஷ்கரணிக்கரையில் குருகாகப் பிறந்தாலே இன்பம் உண்டாகும் என்பதே இவர் பாரிப்பு. நாரை (குருகு) சத்வ குணத்திற்கான அடையாளம். செயலில் குருகு கண்ணுக இருக்கும். நீர்மையான இடத்தில் இதுவாழும். அதனால் 'கோனேரியில் வாழும் குருகாய்ப் பிறப்பேனே' என்கிறார்.



## மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே

குருகாகப் பிறக்கப் பாரித்த ஆழ்வார் மனதை மாற்றிக் கொண்டு, மீனாகப் பிறக்க விழைகிறார். குருகாய்ப் பிறந்து மலையைவிட்டுப் பறந்து சென்று தொடர்பு விட்டுப் போகலாம் என்பதால் புஷ்கரணியில் மீனாய் இருந்து, நீராடும் அடியார் பாதங்களை வருடலாம் என்று ஆசைப்படுகிறார். தசாவதாரங்களில் முதல் அவதாரம் மீன்தானே!

## பொன் வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேன் ஆவேனே!

குருகு, மீன் பிறவியின்றி, கைங்கர்ய பரனாக இருந்து தீர்த்தப்படிக்கத்தை ஏந்திச் செல்லப் பாரிக்கிறார் குலசேகரர். நீர்நிலை சீராக இருந்தால்தான் மீன் உயிர்வாழும். கூட்டத்தின் நடுவில் சிக்கித் தவிக்காமல் கைங்கர்யபரனாக இருப்பது நல்லது என்கிறார் இவர்.

## செண்பகமாய் நிற்கும் திருவுடையேன் ஆவேனே!

'வானவர் வானவர் கோனொடும் சிந்து பூ மகிழும் திருவேங்கடம்' என்றபடி, புஷ்பத் தொண்டாற்றும் தேவர்களுக்கு உபகாரமாக, மலையில் செண்பக மரமாகப் பிறக்க ஆசைப்படுகிறார். பொன்வட்டில் தாங்கிச் செல்லும் தொண்டாற்று கையில், வட்டில் தொலைந்து விட்டால் பழிக்கு ஆளாகிப் பணிதுறக்கும் நிலை ஏற்படலாமே! என்ற அச்சம். செண்பக மலர் திருமால் உகந்த மலர். "தேனில் இனிய பிரானே! செண்பகப் பூச்சூட்டவாராய்!" என்று பெரியாழ்வார் கண்ணனை அன்புடன் அழைப்பார். செண்பக மலர் உதய கால

உயர்மலர். திருமலைவாசன் திருவடிகளில் செண்பக மலர்களாக விழுந்து ஆனந்தப்படலாமே என்று ஆழ்வார் பாரிக்கிருர்.

### தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே!

செண்பக மரமாக நின்ருல், திருமலைக்கு வரும் செல்வர் எவராவது தம்வீட்டில் கொண்டு போய் நாட்டவிரும்பிப் பெயர்த்துச் செல்லலாமே! அதனால் திருமலை வாசம் கிட்டாமல் போகலாமே! என்றஞ்சும் ஆழ்வார், சாதாரணப் புதராக இருக்க விரும்புகிருர். புதரை எவரும் பொருட்படுத்தமாட்டார்கள். நிம்மதியாக இருக்கலாம் என்கிருர்.

### அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தன் ஆவேனே!

புதரையும் எவரேனும் பிடுங்கி எறிந்து பாதையைச் சீர்திருத்தலாம். அதனால் திருமலையில் பொற்சிகரமாக இருக்க விரும்புகிருர் ஆழ்வார். மின்னனைய நுண்ணிடையரான ஊர்வசி, மேனகை இவர்களின் ஆடல்பாடல்களைத் துளியும், விரும்பாத ஆழ்வார், மலையில் சிகரமாக இருக்க விரும்புவது நம் உள்ளத்தை உருக்கும்.

### கானாறாய்ப் பாயும் கருத்துடையேன் ஆவேனே!

சிகரத்தில் அனைவரும் ஏற முடியாதே! அனைவருக்கும் பயன் படுவதுதானே பிறவியின் சிறப்பு! அதனால் வெண்கொற்றக்குடையின் கீழ் மாமன்னனாக இருக்க விரும்பாத இவர் திருமலையில் ஆருகப் பிறக்கப் பாரிக்கிருர்.

### நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேன் ஆவேனே!

காட்டாற்றில் எப்பொழுதும் நீர் இருக்காது. சிலசமயம் வற்றிவிடும். திருமலைவாசம் பயனற்றதாகிவிடும். அதனால் பக்தர்களின் பாததூளி படும்படியான பாதையாக (வழி) இருக்கப்பாரிக்கிருர்.

### படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பேனே!

பாதையாகி விலகிக்கிடப்பதில் பயனில்லை. திருமலைவாசன் பக்கத்தில் இருந்து, அவனைக் கண்ணுர சேவிக்க விரும்பும் ஆழ்வார். அர்த்த மண்டபத்தில் படியாக இருக்க விரும்புகிருர். அடியாரும், வானவரும் மிதிக்கும்படியாக இருந்தால் அவர்கள் பாததூளி படும் பாக்கியமும் கிட்டுமே என்ற பாரிப்பு. வேங்கடநாதனின் பவளவாயழகைக் கண்டு மகிழவும் நல்ல வாய்ப்பு என்கிருர். செடியாய் வல்வினைகள் தீர்க்கும் திருமால் - நெடியான் - வேங்கடவன் - அவன் கோவில் வாசலில் படியாகக் கிடப்பது பெரும் பேறல்லவா!

தேவர்களும், அடியார்களும், தேவமாதர்களும் வேங்கடவனைச் சேவிக்கவந்து கூடுவர். அவரின் திருவடிச் சுவடு பதியலாம். மிகப்பெரிய பாக்கியம் இது என்கிருர். திவ்ய தேசங்களில் அர்த்த மண்டப வாசற்படி 'குலசேகரன்படி' என்றே இன்றும் அழைக்கப்படுகிறது.

### எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே!

முடிவேந்தர் சிகாமணி குலேசேகரர், குருகு, மீன், தொண்டர், செண்பகம், தம்பகம், சிகரம், கானாறு, மலைப் பாதை, கோவில் வாசற்படி என்று பலபிறவிகளிலும் ஒவ்வொரு குறை கண்டார். படியாகப் பிறந்தாலும், அதிலும் ஒருகுறை தெரிந்தது.. செல்வந்தர் எவராவது படிக்கும் கவசம் போட்டுவிட்டால் திருவேங்கடவனைச் சேவிக்கமுடியாது தவிக்க நேருமே! என்று மனம் பதைத்தார். இறுதியில் தாமாக ஒரு பிறவியையும் வேண்டிக் கொள்ள விரும்பாமல், "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே!" என்று பாரித்து நிறைவு செய்கிருர். 'நான் அறியவேண்டாம். திருமலையில் உள்ளதொரு பதார்த்தமாக அமையும் - அல்லது திருவேங்கடநாதனாகவே பிறவி வேண்டும்' என்று முன்னோர் பணிப்பர்.

மாரி மாருத தண்ணம்மலை வேங்கடத்தில், வேங்கடவன் கமலப்பாதங்களைச் சேவித்துக் கொண்டே வாழவேண்டும் - வேங்கடமலை வாசமும், அவன் வடிவழகில் லயிப்பதுமே பிறவிப்பயன் என்பதே இவர் கொள்கை. குலசேகரர் பிறவி மிக உயர்ந்த பிறவி. இவரது பாசுரங்களின் சாயலில்,

"மாடாக நிழற்று செழுமரனாக,
தவச்சிறிய
பூடாகக் குழைத்த நறும் புதலாக
வழிப்படுமோ
ரோடாகப் பெறுவமெனிலும்
உயிர்காள்! நற்கதிபெறலாம்
வீடாகத் திருநெறிமால்
வீற்றிருக்கும் வேங்கடத்தே"

என்று திருவேங்கடக் கமலம் பகம் பாராட்டுகிறது.



# சடாயு

திருக்குடந்தை சௌரிராஜ திருவேங்கடத்தான்

ஸ்ரீ ராமாயணத்தில் அநேக கதாபாத்திரங்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு தனிச்சிறப்பு. அப்படிப்பட்ட கதாபாத்திரங்களில் சடாயுவுக்கு ஒரு சீர்மை உண்டு. அவர் சரித்திரம் மூலம், நாம் அறிய வேண்டிய உயர்ந்த தத்வங்களும் நல்ல நீதிகளும் உண்டு. அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

பரம்பொருளை, ஜீவன் அடைய எது தடையாய் உள்ளதோ, அது விரோதி எனக் கூறப்படுகிறது. விரோதியில் மூன்று வகை. அஜ்ஞானம், கருமம், ப்ரக்ருதி - சம்பந்தம் என்பதாம்.

தேஹமே (உடம்பே) ஆத்மா என நாம் நினைப்பதும், அந்த ஆத்மா தனக்கே உரியது, எம்பெருமானுக்கு உரியது அல்ல என எண்ணும் எண்ணம் அஜ்ஞானம் ஆகும். இதை குலசேகரப்பெருமாள், தம் பெருமாள் திருமொழியில்

**மெய்யில் வாழ்க்கையை**
**மெய்யெனக் கொள்ளும்**
**இவ்வையந்தன்னொடும்**
**கூடுவதில்லையான்"**

என திட்டவட்டமாக அறிவிக்கிறார்.

அடுத்தது கருமம். அதாவது புண்ணியம் - பாவம். இரண்டும் பரமனை அடைய தடை. பாவம் தடை என்றால் புரிகிறது. புண்ணியம் எப்படித் தடையாகுமென்றால் புண்ணிய பலத்தால் இவ்வுலகில் சகல ஐச்வர்யங்களையும், மறுமையில் சுவர்க்கம் முதலியவைகளை அளித்து, திரும்பி நாம் புண்ணிய பலன்களை அனுபவித்த பிறகும் பிறக்க வழி வகுக்கிறது. இதைத்தான் திருவள்ளுவரும்

"இருள்சேர் இருவினையும் சேரா
இறைவன் - பொருள்
சேர் புகழ் புரிந்தார் மாட்டு"

எனக்கூறுகிறார். அதாவது இறைவனை அடைய விரும்புவர்களுக்கு, நல்வினையும் தீவினையும் சேராது என்பதாம்.

அடுத்தத் தடை ப்ரக்ருதி - சம்பந்தம் (சரீரத் தொடர்பு) - பரமனை அடைய நீங்க வேண்டும். சக்ரவர்த்தி திருமகள் குளிர்ந்த திருநோக்கு சடாயுவின் மீது பட, அவர் சரீரத்தை விட்டு, அந்த பரம்பொருளின் திருவடியை அடைந்தார் என்பது பிரஸித்தம்.

இனி சடாயுவின் சரித்திரத்தில் நமக்கு கிடைக்கும் அறிய அர்த்த விசேஷங்களை உணர்வோம்.

சக்ரவர்த்தித் திருமகனுடைய மிகச் சிறந்த செல்வங்களில் முதல் செல்வமான சீதாப் பிராட்டியை அதாவது உயரிய உடைமைப் பொருளை இராவணன் முறை தவறி, தனக்கு ஆக்கிக்கொள்ள எடுத்துச்சென்றபோது சடாயு, இதனை அறிந்து தம்மால் இயன்ற அளவு இராவணனோடு போர் புரிந்தார். ஸ்ரீராமனைப் பிறகு கண்டபோது, 'இராமா! உன் உயிரையும் (ஆதாவது பிராட்டியையும்) என் உயிரையும் இராவணன் எடுத்துக்கொண்டு போய்விட்டான்' என்ற உண்மையை அறிவிக்கிறார். முதலில் ஸ்ரீராமனைக் கண்ட சடாயு உயிர் போகும் நிலையிலும் 'ஆயுஷ்மன்' என மங்களாசாஸனம் பரமனுக்கு பண்ணினார். இராமனும் அந்த சடாயுக்கு அந்திம க்ரியை செய்து "கச்ச லோகாநநுத்தமான்" என அருளி பரம பதத்தை தந்து அருள்பாலித்தான். இங்கு பிறப்பு அறுவதற்கு (ஜன்மம் கழிய) உடம்பு தடை என்பது புலனாகிறது. பரமன் திருவடி அடைய, பிறப்பு - இறப்பு இரண்டுமே தடையாகும். இவைகளை நீக்குபவன் திருவேங்கடத்துறைபவன் என ஆழ்வார், "ஒயும் மூப்புப் பிறப்பு - இறப்புப் பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து ஆயன்" என்கிறார்.

இங்கு ஒரு கருத்தை நாம் நன்கு அறிய வேண்டும். சக்ரவர்த்தி திருமகன், தன்னை ஒரு சாதாரண மனதனாக அழைத்துக்கொள்வதில் மகிழ்ச்சி உற்றபோதிலும் சடாயுவுக்கு, "கச்ச லோகான் அநுத்தமான்" என திருவாய் மலர்ந்தருளி மோட்சம் அளித்ததன் மூலம், ரத்தனம் எப்படி ஒளிவிட்டு ப்ரகாசிக்குமோ, அவ்வாறு தான் பரம புருஷன் என்பதை நிலைநாட்டி தன் பரத்வத்தை (மேன்மையை) சகல உலகங்களுக்கும் வெளிப்படுத்தினார். யாரும், தன்னிடம் இல்லாததை தனக்கு முடியாத ஒன்றை, பிறருக்கு கொடுக்கமுடியாது. அந்த வீடு பேற்றை அளிக்க வல்லவன்,

அந்த பரம்பொருளான இராமனே ஆதலால் சடாயுவுக்கு பரம கதியை கொடுத்த சக்ரவர்த்தி திருமகனே அப்பரமன் என நமக்கு சந்தேகத்திற்கு இடமில்லாமல் தெளிவாகிறது.

தசரதனுக்கு ஸ்ரீராமனிடத்தில் உள்ள அன்பு இணையற்றது. எல்லையற்றது. அப்படி பாசம் கொண்ட தசரதனுக்கு இராமன், அந்திமச் சடங்குகள் செய்யவில்லை. ஆனால் பரமனான இராமன், ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தை சடாயுக்கு செய்தான். காரணம், சத்தியம் என்பது தருமமே ஆனாலும் இராமபிரான் மிக மிகச் சிறந்த தருமம் என்று கருதவில்லை. இதை ஸ்ரீபிள்ளை லோகாசாரியார் "சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்கு உறுப்பு" என அருளிச்செய்கிறார். இதிலிருந்து பரமன் சங்கல்பப்படி அதாவது திருவுள்ளப்படியே எதுவும் நடக்கும் என நம்மால் அறியமுடிகிறது. மேலும் பிராட்டியை (பரமனோடு எப்போதும் பக்கத்தில் இருக்கவேண்டிய செல்வத்தை) பிரிப்பதில் பொறுக்கமாட்டாமல், இராவணனோடு சடாயு தன் உயிரையும் மதிக்காமல் போர் புரிந்தார். எங்கு அநீதி நடந்தாலும், அதை எதிர்க்க வேண்டும். நமக்கு அந்தச் செயல்களில் சம்பந்தம் இல்லை என இருக்கக்கூடாது என்பது இங்கு சடாயுவின் சரித்திரத்திலிருந்து நாம் பின்பற்ற வேண்டிய அறிவுரை ஆகும். காரணம் அநீதியை எதிர்த்து, தர்மத்தை காக்க, சடாயு தன் உயிரையே அர்பணித்தார் என்பது நாம் ஊன்றி நோக்குதற்கு உரியதாகும். இந்த தியாகத்தின் காரணமாக இவர் "பெரிய உடையார்" எனக்கொண்டாடப்பட்டார்.

இந்த சாரமான பொருள்களை அடக்கி, தம்முடைய பெருமாள் திருமொழியில், குலசேகரப்பெருமாள், ஸ்ரீராமாயணத்தை சுருக்கமாக அருளிய கடைசி "அங்கணெடு மதிள் புடைசூழ் அயோத்தியென்னும்" என்ற பதிகத்திலே, "தன மருவு வைதேகி பிரியலுற்றுத் தளர் வெய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றி" என்ற ஒரு திருப்பாசுரத்திலே ஸ்பஸ்டமாக சடாயுவுக்கு, பரமனான ராமன் மோட்சம் அளித்ததை அருளிச்செய்கிறார்.

ஆக, சடாயு சரித்திரத்திலிருந்து நாம் அறிய வேண்டியவை:

இறைவனை அடைய அஜ்ஞானம், கருமம், ப்ரக்ருதி சம்பந்தம் ஆகிய தடைகள் நீங்க வேண்டும். பரமன் குளிர்ந்த நோக்குபட்டால், சரீரம் நீங்கி நற்கதிபெற முடியும். எதுவும் அந்த பரம்பொருளின் இச்சைப் படியே நிகழும். எங்கு தவறு, அநீதி நடந்தாலும் சடாயுவைப் போல எதிர்க்கவேண்டும்.

நம் வினைகள் தீர பகவானுடைய திருநாமங்களைக் குறிப்பாக சடாயு ஸ்மரித்ததுபோல 'இராமா! இராமா!' என ஓதி, அந்த பரமன் திருவடிகளில் சரண் அடைவோம்.

## தினசரி சேவைகள்

| சேவை | கட்டணத் தொகை ரூ. | அனுமதிக்கப் படும் நபர்கள் எண்ணிக்கை | அனுமதிக்கப் படும் நேரம் (மாறக்கூடியது) |
|---|---|---|---|
| 1. சுப்ரபாத தரிசனம் | 100/- | 1 | காலை 2-30 மணி |
| 2. தோமால சேவை | 200/- | 1 | காலை 3-30 மணி |
| 3. அர்ச்சனை | 200/- | 1 | காலை 4-30 மணி |
| 4. தோமால சேவை மற்றும் அர்ச்சனை (வெள்ளிக் கிழமைகளில்) | 400/- | 1 | காலை 6-30 மணி |
| 5. அமந்த்ரணோத்ஸவம் | | | |
| வெள்ளிக்கிழமைகளில் | 600/- | 1 | காலை 6-30 மணி |
| மற்றைய நாட்களில் | 600/- | 1 | காலை 3-30 மணி |
| 6. நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைதோறும்) | 100/- | 1 | காலை 5-30 மணி |
| 7. சிறப்பு நுழைவு சீட்டு | 30/- | 1 | சர்வ தரிசன அனுமதியின் போது |
| 8. ஏகாந்த சேவை | 100/- | 1 | இரவு 10-30 மணிக்குப்பிறகு |

குறிப்பு:-

1) வரிசை எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்துகொள்ளலாம்.
2) சிறப்பு நுழைவு மற்றும் ஏகாந்த சேவை சீட்டுக்களுக்கு முன்பதிவு கிடையாது.
3) ஏகாந்த சேவைகளுக்கான சீட்டுகள் ஸர்வ தரிசனத்திற்குப் பிறகு இரவு 10-30 மணிக்குமேல், ஒதுக்கப்படும் சீட்டுக்களைப் பொறுத்து விற்கப்படும்.

(தொடர் கட்டுரை)

# நாலாயிரத்தில் நற்பறவைகள்

திரு. கோம்பூர் ஆர்.டி. சாரி - சென்னை.

## மயில் :

கருமேகத்தைக் கண்டு தன் சிறகை விரித்து களிநடம்புரியும் மயிலைக் கண்டு மயங்காதவர் யார்? பெண்ணே மயிலே என்று போற்றும் சிறப்பு எல்லாப் புலவர்களுக்கும் உரித்தானது. ஆழ்வார்களோ மயில் பறவையின் சிறப்பினைத் தங்கள் பாசுரங்களில் பின்னிப் பிணைத்து இருக்கிறார்கள்.

## பெரியாழ்வார் :

பெரியாழ்வார் தன்னுடைய திருமொழியில்:

"பேடை மயிற்சாயற் பின்னை
மணாளா!
நீராட் டமைத்து வைத்தேன்
ஆடியமுதுசெய், அப்பனு முண்டிலன்
உன்னோடுடனே யுண்பான்"

என்கிறார்.

இன்னொரு பாசுரத்தில், கண்ணன் குழல் ஊதும் சிறப்பினைப் பாடுகின்ற போது:

"இட அணரை இடத் தோளொடு
சாய்த்து
இருகை கூடப் புருவம் நெரிந்தேற
குடவயிறுபட வாய்கடை கூடக்
கோவிந்தன் குழல்கொடூதின
போது
மடம யில்களோடு மான்பிணை
போலே
மங்கை மார்கள் மலர்க்கூந்தல்
அவிழ
உடைநெகிழஓர் கையால் துகில்பற்றி
ஒல்கி யோடரிக்க ணோடநின்
றனரே"

என்று மயிலுக்குச் சிறப்பையும் பாடி மயில்போல் ஆடும் மங்கையின் சிறப்பைப் பாடுகின்றார்.

"நின்றாடு கணமயில்போல்
நிறமுடைய நெடுமாலூர்"

என்று மற்றொரு பாசுரத்திலும் திருவரங்கத்தைப் பாராட்டுகின்றார்.

## ஆண்டாள் :

ஆண்டாள் நாச்சியார் திருமொழியில், மயிலை அழைத்துப் பாடுகையில்:

"கணமா மயில்காள்! கண்ணபிரான்
திருக்கோலம் போன்று"

என்றும்,

"நடமாடித் தோகை விரிக்கின்ற
மாமயில்காள் உம்மை
நடமாட்டங் காணப் பாவியேன்
நானோர் முதலிலேன்"

என்றும் பாடுவதைக் காணலாம்.

## திருமங்கையாழ்வார் :

திருமங்கையாழ்வார் திருப்பிருதி என்னும் திருப்பதியைப் பாடுகின்ற போது,

"பீலி மாமயில் நடஞ்செயும்
தடஞ்சுனைப்
பிருதி சென் றடைநெஞ்சே!"

என்று மயிலையும், அந்த மயில் நடம் செய்கின்ற சுனை மிக்க திவ்வியத்தலத்தையும் பாடியுள்ளார்.

இதே ஆழ்வார் தில்லைத் திருச்சித்திரக்கூடத்தைப் பாடுகின்ற போது,

"கானாட மஞ்ஞைக் கணமாட
மாடே
கயலாடு கால்நீர்ப் பழனம்
புடைபோய்"

என்றும் பாடுகின்றார்.

இன்னொரு பாசுரத்தில், திருவாலியில்,

"சோலைத் தலைக்கண மாமயில்
நடமாட,
மழைமுகில் போன்றெழுந்து
எங்கும்
ஆலப்புகை கமழும் அணியாலி
யம்மானே!"

என்றும் பாடுகின்றார்.

திருநாங்கூர்க் காவளம்பாடியைப் பாடுகின்றபோது,

மந்தமார் பொழில்கள்தோறும்
மடமயி லாலும் நாங்கை
சுந்தமார் காவ ளந்தன்
பாடியாய்! களைகண் நீயே!

என்கிறார்.

திருநந்திபுர விண்ணகரத்தைப் பாடுகின்ற 10 பாசுரங்களில் மயிலைப் போற்றிப் பாடுகின்ற பாசுரங்கள் வருமாறு:

"கொம்புகுதி கொண்டுகுயில் கூவ,
மயி லாலுமெழில்
ஆர்பு றவுசேர்"

"மந்தமுழ வோசைமழை யாகவெழு
கார்மயில்கள்
ஆடுபொழில்சூழ்"

திருககுருங்குடியைப் பாடு கின்றபோது,

"கோல மயில்பயி லும்புறவில்
குறுங்குடிக் கேயென்னை
யுய்த்திடுமின்"

என்று பாடுகின்ருர்.

திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில்,

"இன்னிசைவண்டமரும் சோலைவாய்
மாலைசேர்
மன்னியமாமயில்போல் கூந்தல்"

என்று பாடுகின்ருர்.

## நம்மாழ்வார் :

நம்மாழ்வார் ஆவினங்கள் பின்னே குழல் ஊதி செல்லும் கண்ணனைப் பற்றிக் கூறும் பாசுரத்தில் மயிலின் தோகையைப் போன்ற கூந்தல் உடைய பெண்களை வர்ணிக்கின்ருர்.

"தோகை மாமயிலார்கள் நின்னருள்
சூடுவார் செவியோசை
வைத்தெழ ஆகள் போகவிட்டுக்
குழலூது போயிருந்தே"

## குயில்:

அன்னத்தின் நடையிலும், மயிலின் ஆடலிலும், குயிலின் பாடலிலும் மயங்காத புலவர்களே இல்லை.

## பெரியாழ்வார் :

பெரியாழ்வார் திருவரங்கத் திருப்பதியைப் பாடுகின்றபோது, திருமால் சேருமிடம் திருவரங்கம் என்கின்ருர்.

"குரவரும்பக் கோங்கலரக்
குயில்கூவும் குளிர்பொழில்சூழ்
திருவரங்கம் என்பதுவே
என் திருமால் சேர்விடமே"

என்று பாடுகின்ருர்.

மற்ரெரு பாசுர...ப்,

"கொம்பினார் பொழில்வாய்க்குயி
லினம் கோவிந்தன் குணம்பாடுசேர்
செம்பொனார் மதிள்சூழ் செழுங்-
கழனியுடைத்திருக்கோட்டியூர்"

என்று பாடுகின்ருர்.

## ஆண்டாள் :

ஆண்டாளின் பாசுரத்தில் குயிலைப் பற்றிப் பாடுகின்றபோது,

புன்னை குருக்கத்தி ஞாழல்
செருந்திப்
பொதும்பினில் வாழும் குயிலே!
பன்னி எப்போதும் இருந்து
விரைந்தென்
பவளவா யன்வரக் கூவாய்"

என்கின்ருர்.

மற்ரெரு பாசுரத்தில், "கள்ள விழ குயிலே" என் வேங்கடவன் வரவேண்டும் எனக் கூவுவாய் என்று பாடுகின்ருர். அப்பாசுரமாவது:

"கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடுங் குயிலே!
மெள்ள இருந்து மிழற்றி மிழற்ருதென்
வேங்கடவன் வரக் கூவாய்!

அடுத்த பாசுரத்தில்:

"காதலி யோடுடன் வாழ்குயிலே! என்
கருமாணிக் கம்வரக் கூவாய்"

என்கின்ருர்.



பார்த்தன் பள்ளி - (பார்த்தசாரதி பெருமாள்)
புகைப்படம்: சாயி கிருஷ்ணின் - வேங்கடேசன்

நாச்சியார் திருமொழியில், காரககோடல் பூக்காள் என்ற பத்துப் பாசுரங்களில் தலைவி பிரிவாற்றாது வருந்திப் பாடுகையில், குயிலிடம் தன் வருத்தத்தைக் கூறிப் பாடும் பாசுரத்தில்.

"பாடும் குயில்காள்! ஈதென்ன
பாடல் நல் வேங்கட
நாடர் தமக்கொரு வாழ்வு
தந்தால் வந்து பாடுமின்"
என்கின்றார்.

ஆண்டாள் தன் திருப்பாவையில், 18வது பாடலில்:

"மாதவிப் பந்தல்மேல், பல்கால்
குயிலினங்கள் கூவின காண்
பந்தார் விரலி உன் மைத்துனன்
பேர்பாட"
என்று பாடுகின்றார்.

## திருமங்கையாழ்வார் :

செங்கல்லாலும் கான்க்ரீட்டாலும் சூழப்பட்ட வீடுகள் இன்று திருவல்லிக்கேணியில் காட்சி தருகின்றன. இயற்கையை மனிதன் சூறையாடியதற்கோர் சான்று இது. திருமங்கையாழ்வார் இந்த திருவல்லிக்கேணியைப் பாடுகின்ற போது,

"பரதனும் தம்பி சத்துருக் கனனும்
இலக்கும னோடு மை திலியும்
இரவும்நன் பகலும் துதிசெய்யநின்ற
இராவணந்தகனை, எம்மானை
குரவமே கமழும் குளிர் பொழி லூடு
குயிலொடு மயில்கள் நின் றால்
இரவியின் கதிர்கள் நுழைதல்
செய்தறியாத்
திருவல்லிக்கேணிக் கண் டேனே"
என்கின்றார்.

திருநாங்கூர் மணிமாடக் கோயில் கொண்டானைப் பாடுகின்ற பாசுரத்தில்,

"குழையாட வல்லிக்குலமாட, மாடே
குயில்கூவ, நீடு கொடிமாடம் மல்கு
மழையாடு சோலை மயிலாலும்
நாங்கூர்
மணிமாடக்கோயில்.........
வணங்கென்மனனே!
என்றும்,

ஆராவமுதன் பள்ளிகொண்ட திருக்குடந்தையைப் பாடுகின்ற போது,

"குயிலாலும் வளர்பொழில்சூழ்
தன்குடந்தைக் குடமாடி"
என்றும் பாடுகிறார்.

திருவெள்ளியங்குடியைப் பாடுகின்ற பாசுரத்தில்,

"அள்ளியம் பொழில்வா யிருந்து
வாழ் குயில்கள்
"அரியரி"யென்றவை யழைப்ப
வெள்ளியார் வணங்க விரைந்-
தருள் செய்வான்
திருவெள்ளியங்குடி - அதுவே"
என்று பாடுகின்றார்.

திருவெள்ளறைத் திருத்தலம் திருவரங்கத்திற்கு அருகாமையில் உள்ளது. அங்கே "மாம்பொ ழில்தளிர் கோதிய மடக்குயில் வாயது துவர்ப் பெய்த" என்றும், இதே பத்தில் மற்றொரு பாசுரத்தில்,

"தீங்குயில்மிழற் றும்படப் பைத்திரு
வெள்ளறை நின்றானே!
என்றும் பாடுகின்றார்.
திருநறையூரைப் பாடுகையில்,

"சினையார் தேமாஞ் செந்தளிர்
கோதிக் குயில்கூவும்
நனையார் சோலை சூழ்ந்தழ காய
நறையூரே"
என்று பாடுகிறார்.

திருமங்கையாழ்வார் மாயனை அழைக்க பறவைகளை அழைத்துப் பாடுகின்ற பாசுரமாவது:

"கூவாய், பூங்குயிலே
குளிர்மாரி தடுத்துகந்த
மாவாய் கீண்ட மணிவண்ணனைவரக்
கூவாய், பூங்குயிலே!

## மதுரகவியாழ்வார் :

நாதனை நாலாயிரம் பாடி மகிழ்ந்த ஆழ்வார்கள் 11. நான் மறையை தமிழ் வேதமாக்கிய நம்மாழ்வாரைப் பாடியவர், மதுரகவியாழ்வார். இவரின் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் 11 பாசுரங்களில் அந்தக் குருகூர்நம்பியைப் புகழ்ந்து வாழ்த்தும் போது.

"குயில் நின்றார் பொழில்சூழ்
குருகூர் நம்பி"
என்கின்றார்.

## நம்மாழ்வார் :

மதுரகவியார் "குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர் நம்பி" என்று புகழ்ந்ததைப் போலவே, நம்மாழ்வாரும் "குயில் கொள் சோலைத் தென்குருகூர்ச் சடகோபன்" என்று பாடிய சொல்லிசை மாலையில் "உயிர்களெல்லாவுலகமுடையவனை, உத்தமனை" என்று வர்ணிக்கின்றார்.

9-ம் பத்து 5-ம் திருவாய்மொழியில்:

"குயில் பைதல்காள் கண்ணன்
நாமமே"
என்ற பாசுரத்தில் புள்ளினங்களைக் கண்முன் கொண்டு வருகிறார்.

## காக்கை:

பறவைகளில் காக்கை சில நற்பண்புகளைப் பெற்றது. உணவு சிறிதேயானாலும் பகிர்ந்து உண்ணும் பழக்கம் இந்தப் பறவையின் ஒரு சிறப்பு அம்சம்.

"காக்கை, குருவி எங்கள் ஜாதி; நல்ல கடலும், மலையும் எங்கள் கூட்டம்" என்று பாட்டுக்கு ஒரு புலவன் பாரதி காக்கையும், குருவிகளையும் மனித வாழ்க்கையு

டன் இணைத்துப் பேசியது ஒரு அரும் சிறப்பு.

இந்த உயர்ந்த பண்பு இருந்தாலும், சில நேரங்களில் மனிதர்கள் ஏனோ இதனை இகழ்ச்சியாகப் பேசுகின்றனர். ஏனெனில் சிலர் தமக்குப் பயன் ஏற்பட "காக்கைப் பிடிக்கிறார்கள்" என்று சொல்வதுண்டு. சிலரை அண்டம் காக்கைப் போல் பார்க்கிறார்கள் இவர்கள்" என்றும் கூறுகிறார்கள்.

காக்கையை மனிதகுல ஜாதியோடு ஒப்பிடும் அதே பாரதி, காக்கையின சிறகினிலே கண்ணனைக் காண்கின்றார். அவரின் முறுக்கு மீசையும், இறுகிய முண்டாசும், தீர்க்கமான பார்வையும், புரட்சிக் கனல் வீசும இதயமும் அந்த யமுனை நதிக்கரை பாலகனை, கார் மேனி வண்ணனை, காளமேகனை காக்கைச் சிறகின் நிறத்தோடு ஒப்பிடுவது காக்கைப் பறவைக்கு உயர்வைத் தருகிறது.

## பெரியாழ்வார் :

காக்கையின் சிறகினிலே நிறத்தை மட்டும் கண்டான் பாரதி. ஆனால், பெரியாழ்வாரோ அந்தப் பிள்ளை மணாளனுக்கு குழல் வார காக்கையை வா, வா என அழைக்கும் பத்துப் பாடல்கள் சிறப்புக்குரியன.

"பேயின் முலையுண்டபிள்ளை
யிவன் முன்னம்
மாயச் சகடும் மருதும் இறுத்தவன்
காயா மலர்வண்ணன்; கண்ணன்
கருங்குழல்
தூய்தாக "வந்துகுழல் வாராய்"
அக் காக்காய்!
தூ மணி வண்ணன்குழல் வாராய்,
அக் காக்காய்!

மற்றுமொரு பத்துப் பாடல்களிலே காக்கையை கோல் கொண்டுவா எனனும் பாடல்கள் தனிச்சிறப்பாக அமைகின்றன.

"சீரொன்று தூ தாய்த் துரியோ
தனன் பக்கல்
ஊரொன்று வேண்டிப் பெறாத
உரோடத்தால்
பாரொன்றிப் பாரதம் கைசெய்து,
பார்த்தற்குத்
தேரொன்றை யூர்ந்தாற்கோர்
கோல்கொண்டுவா,
தேவ பிரானுக்கோர்
கோல்கொண்டுவா"

இராமாயணத்தில் சக்கரவர்த்தித் திருமகனும், சீதைப்பிராட்டியும் சித்திரக்கூடத்தில் ஒரு சிறு மலைக்கு அருகே மலர்களின் பரிமளம் விளங்கும் ஒரு இடத்தில் விளையாடியபின் தேகம் தளர்ந்து சீதை அமர, இராமன் சீதையின் மடியில் தலை வைத்து உறங்கிவிட்டான்.

அப்பொழுது ஒரு காகம் வந்து சீதையின் மார்பகத்தைக் குத்தியது. இதனால், சீதையின் மார்பகத்திலிருந்து இரத்தம் வர, சீதை அயர்ந்து இருந்தாள். இந்தக் காக்கையை விரட்ட கல் எடுத்து அடிக்க, காக்கை நகரேன் என்று மீண்டும் மார்பகத்தைக் குத்தியது. அண்ணலோ உறக்கத்திலிருந்து எழுந்து, ஒரு பறவையை ஓட்டக்கூட திறமையின்றி சீதை இருக்கிறாளே என்று ஒருகணம் பரிகசித்து, பின்னர் தேவியின் உடலில் ஏற்பட்ட இந்தக் காயம் காக்கையினால் அல்ல; இது ஒரு அரக்கனால்தான் என்று கண்டு கொண்டு பிரம்ம அஸ்திரத்தை வீசுகின்றார் காக்கை உருவில் வந்த இந்திரபுத்திரன். ஐயந்தன் வாயு வேகத்துடன் பூமிக்குள் மறைகின்றார். பிரம்ம அஸ்திரத்துடன் கூடிய புல் காகத்தைத் தொடர எங்கெங்கோ ஓடி, பின்னர் காக்கை இராகவனை சரணடைகிறது. தரித்த பிரம்ம அஸ்திரத்தை எதிரியைக் கொல்லாமல் மீண்டும் பெறமுடியாது. இராகவனோ எதிரிக்கு இரங்கி அதனுடைய ஒரு கண்ணை மட்டும் அழிக்கின்றான். இந்த நிகழ்ச்சியை அனுமனுக்குச் சொல்லி, "இராவண அரக்கர்களிடமிருந்து தம்மை மீட்டுச் செல்ல இன்னும் ஏன தாமதம்? என்று இராமனைக் கேளுங்கள்" என்று சீதைப்பிராட்டி சொல்கின்ற வரலாற்றை ஆழ்வார்கள் தங்களுடைய பாடல்களில் அழகாக சித்தரிக்கின்றனர்.

பெரியாழ்வார் திருமொழியில் வாராரும் முலைமடைவாள் வைதேகி இராகவனுக்கு அனுமன் என்னும் சிறிய திருவடி மூலம் கூறிய அடையாளம் இப் பாசுரத்தில் இடம்பெறுகிறது.

சித்திர கூடத்து இருப்பச்
சிறு காக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய
அனைத்துலகும் திரிந்தோடி
வித்தகனே! இராமாவோ!
நின்னபயம் என்று அழைப்ப
அத்திரமே அதன் கண்ணை
அறுத்ததும் ஓரடையாளம்"

மேலும் பெரியாழ்வார் காக்கையைப் பற்றி ஐந்தாம் பத்து முதல் திருமொழியில் குறிப்பிடுகையில்,

"வாக்குத் தூய்மையிலாமையினாலே
மாதாவுன்னை
வாய்க் கொள்ளமாட்டேன்
நாக்கு நின்னையல்லா லறியாது
நானதஞ்சுவ னென்வசமன்று
மூர்க்குப் பேசுகின்ற னிவனென்று
முனிவாயேலு மென்
நாவினுக்காற்றேன்

காக்கை வாயிலும் கட்டுரைகொள்வர்
காரணா கருளக்கொடியானே"

என்கின்றார்.

"உலகங்களுக்கெல்லாம் ஆதி காரணமானவனே! பெரிய திருவடியை கொடியாக உடையவனே, என்னுடைய வாய் மொழி தூய்மை இல்லாமையினால் உன்னை வாய்க்கொண்டு துதிக்க யோக்யதை அற்றவனாக இருக்கிறேன். என்னுடைய நாக்கோ உன்னையொழிய மற்றவர்களை அழைக்க அறியாது. அந்த நாக்கானது எனக்கு வசப்பட்டு நிற்பது அன்று. இவன் மூடர் பேசும் பேச்சைப் பேசா நின்றான் என்று திருவுள்ளம் பற்றி நீ சீறியருளினாலும் என்னுடைய நாக்கின் பதற்றத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. காக்கையினுடைய வாயிலுண்டான சொல்லையும், நற்சொல்லாகவே கொள்வார்கள். காக்கை ஒரு இடத்தில் இருந்து கொண்டு தனக்குத் தோன்றிய படி கத்திவிட்டுப் போனாலும், அதனை அறிவுடையோர் கேட்டு இது நமக்கு உறவினர்கள் வருகின்ற செய்தியைச் சொல்கிறது என்று கொள்வர். இப்படி காக்கை கரவுதல் என்பதிலிருந்து நன்மை காண்பது போல் என்னுடைய நாவிலிருந்து என்ன சொன்னாலும், அதை நீ நற்றமாகவே கொள்ள வேண்டும்."

"பொற்றிகழ் சித்திர கூடப்
பொருப்பினில்
உற்றவடிவில் ஒருகண்ணும்
கொண்ட - அக்
கற்றைக்குழலின் கடியன்
விரைந்துன்னை
மற்றைக்கண் கொள்ளாமே
கோல்கொண்டுவா!
மணிவண்ண நம்பிக் கோர்
கோல் கொண்டுவா!

சீதாப்பிராட்டியின் திருமேனியில் இரு கண்ணும் பதித்தாலும் ஒரு கண்ணை மட்டும் அழித்தான அன்று. இன்றோ நந்தகோபன் குமரனுக்கு நடையிட கோல் கொண்டு வாராயாகில் மற்றொரு கண்ணும் பறித்துக்கொள்ளாதபடி காத்துக்கொள்வது உன் திறன் என்று யசோதை கூறுவதாக பெரியாழ்வார் பாடுகிறார்.

## திருமங்கையாழ்வார் :

திருமங்கையாழ்வார் தன் சிறிய திருமடலில் கலியன் "ஆரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே" என்கின்றார். வேட்டையாடச் செல்லுபவர் நிலத்தில் வாழும் முயலைத் தொடராமல் வானில் பறக்கும் காக்கை வேட்டையாடத் தொடர்வது உபயோகமாகுமோ? இதன் பொருள்: அர்ச்சாவதாரம் பற்றுவதற்கு எளிதாயிருக்க பரத்வத்தை நாடுவது சரியாகாது என்பதே.

திருநறையூரைப் பாடுகையில்:

"கவ்வைமா களிறுந்தி
வெண்ணி யேற்ற
கழல்மன்னர் மணிமுடிமேல் காகமேற
தெய்வாள் வலங்கொண்ட சோழன்
சேர்ந்த
திருநறையூர் மணிமாடம்
சேர்மின்களே!

இதே ஆழ்வார் மாயனை அழைக்க பறவைகளை அழைத்துப் பாடுகின்ற பாடலில்:

"கரையாய், காக்கைப் பிள்ளாய்!
கருமாமுகில் போல்நிறத்தன்"

என்று காக்கையைப் பாடுகின்றார்.

(தொடரும்)




Statement about ownership and other particulars about
**SAPTHAGIRI**
(MONTHLY)
FORM IV
*See Rule 8*

1. Place of Publication : TIRUPATI
2. Periodicity of its Publication : Monthly
3. Honorary Editor : N. Ramesh Kumar, I.A.S., Executive Officer, T.T.D.
4. Printer's Name : Sri P. Mohan Rao
   Whether citizen of India : Yes
   Address : Manager, T.T.D. Press, Tirupati
5. Editor & Publisher's Name : Sri N.S. Ramamurthy, M.A.,
   Whether citizen of India : Yes
   Address : Editor, Sapthagiri, T.T.D. Journal, Tirupati
6. Name and address of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one percent of the Total Capital } Board of Trustees represented by the Executive Officer on behalf of T.T.D., Tirupati

*I, N.S. Ramamurthy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI
Date : 29-2-1996

(Sd.) N.S. RAMAMURTHY
*Signature of the Publisher*

# எங்களாழ்வான் வைபவம்

திரு. கே. ராமஸ்வாமி அய்யங்கார் - சென்னை

விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸ்தாபனாசார்யரான ஸ்ரீராமானுஜரால் 74 ஸிம்ஹாஸநாதிபதிகளில் ஒருவராக நியமிக்கப்பட்ட இம்மஹாசார்யரின் திருநாமம் "ஸ்ரீவிஷ்ணுசித்தர்" என்பதாகும். இவர் ஸ்ரீரங்கத்திற்கு அருகிலுள்ள திருவெள்ளறை என்னும் திவ்ய தேசத்தில் ஸ்ரீவைஷ்ண ப்ராஹ்மண குலத்தில் சித்திரையில் ரோகிணியில் அவதரித்தவர்.

கூரத்தாழ்வான் கண் இழந்த பின்பு மேல்நாட்டிலிருந்து ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிய ஸ்ரீராமானுஜர், ஸ்ரீபாஷ்யத்தில், எஞ்சியிருந்த பகுதியைக் கூரத்தாழ்வானுக்குப் பதிலாக இவரை உசாத்துணையாகக் கொண்டு எழுதுவித்தார். அப்படி எழுதும்போது, ஆழ்வானுக்குத் துல்யமாயிருந்த இவருடைய மேதாவிலாஸத்தைக் கண்டு "எங்கள் ஆழ்வானோ" என்று எம்பெருமானார் அபிமானத்தினால் 'எங்களாழ்வான்' என்ற திருநாமத்தால் அழைக்கப்பட்டார்.

எம்பெருமானால் நியமிக்கப்பட்ட இவர் ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்கு "விஷ்ணு சித்தீயம்" என்னும் வ்யாக்யானத்தை அருளிச்செய்துள்ளார்.

நடாதூராழ்வானுடைய பேரரான "வாத்ஸ்ய வரதாசார்யர்" என்னும் நடாதூரம்மாள் இவருடைய சிஷ்யர்களில் முதன்மையானவர்.

வ்ருத்தரான நடாதூராழ்வான் வாலிபனான தமது பேரர் வாத்ஸ்ய வரதருக்கு ஸ்ரீபாஷ்யம் காலக்ஷேபம் சொல்லுவதற்குத் தம்மால் இயலாததால், திருவெள்ளறை சென்று எங்களாழ்வானிடம் ஸ்ரீபாஷ்யம் காலக்ஷேபம் செய்து வரும்படி அவரைக் காஞ்சியிலிருந்து திருவெள்ளறைக்கு அனுப்பினார்.

## "நான் செத்த பிறகு வா"

திருவெள்ளறைக்கு ஒரு நாள் விடியற்காலையில் வந்து சேர்ந்த வாத்ஸ்ய வரதர், எங்களாழ்வான திருமாளிகைக் கதவைத் தட்டி அழைத்தார். விஷ்ணுசித்தர் உள்ளிருந்தபடியே "யார்?" என்று வினவினார். "நான்தான்" என்றார் வரதர். "நான் செத்த பிறகு வா" என்று கூறிக் கதவைத் திறக்காமலேயே அவரை அனுப்பிவிட்டார் எங்களாழ்வான்.

"நான் என்னும் அஹம்காரம் செத்த பிறகு வா" என்று அவ்வாக்கியத்தின் உட்கருத்தை அறியாத வரதர், காஞ்சிக்குச் சென்று பாட்டனாரிடம் இச்செய்தியைத் தெரிவித்தார். "அடியேன்" என்று சொல்ல வேண்டியிருக்க, 'நான்தான்' என்று கூறிய அவரது மடமையைச் சுட்டிக்காட்டி, மறுபடியும் அவரிடம் சென்று "அடியேன்" என்று ஸ்வரூபத்துக்குப் பொருத்தமாகச் சொல்லி, அவரிடம் பிரார்த்தித்து ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் கேட்டு வருவாய்" என்று மறுபடியும் அவரைத் திருவெள்ளறைக்கு அனுப்பினார் நடாதூராழ்வான்.

மறுபடியும் சென்ற வாத்ஸ்ய வரதர் 'அடியேன்' என்று பதில் சொல்லி, எங்களாழ்வானுடைய கடாக்ஷத்திற்குப் பாத்திரராகி, ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் சொல்லும்படி அவரைப் பிரார்த்தித்தார். திருவெள்ளறையிலேயே அவர் திருவடிகளில் சிசுருஷை செய்துகொண்டு நீண்டநாள் வாழ்ந்து, ஸ்ரீபாஷ்யார்த்தங்கள் அனைத்தையும் கசடறக் கற்றார் வாத்ஸ்ய வரதாசார்யராகிய நடாதூரம்மாள்.

இப்படி அம்மாளுக்கு ஆசார்யரானமையாலே "அம்மாளாச்சாரியர்" என்று அழைக்கப்பட்டார் எங்களாழ்வான். இன்றும் அவர் வம்சத்தில் உதித்தவர்கள் அப்பட்டத்தையிட்டு அழைக்கப்படுகின்றனர்.

## "ஆயர் தேவு"

நஞ்சீயர் திருவாராதனப் பெருமாளான ஆயர்தேவு எங்களாழ்

---

## விண்ணப்பம்

'ஸப்தகிரி'யில் வெளியிடப்படும் சமயச் சார்பான கட்டுரைகளுக்கு அளிக்கப்படும் சன்மானத்தொகை கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளது. ஆகவே கட்டுரையாசிரியர்கள் தொடர்ந்து தங்கள் முழு ஒத்துழைப்பினை நல்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

--ஆசிரியர்.

## வாராந்திர சேவைகள் மற்றும் உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) சிறப்பு பூஜை | (திங்கட்கிழமைகளில்) ரூ. 3000/- காலை 6-00 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸத்ரம், 5 பெரிய லட்டு கள், 5 வடைகள். |
| 2) அஷ்டதளபாத பத்மாராதானா சேவை : | (செவ்வாய்க்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். |
| 3) ஸகஸ்ர கலஸாபிஷேகம் | (புதன்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய் லட்டு கள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசை கள், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப் பொங்கல், பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு. |
| 4) திருப்பாவாடை | (வியாழக்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட் டுகள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள், 5 தேன் துளைகள், புளி யோதரை, பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு.) |
| 5) அபிஷேகம் | (வெள்ளிக்கிழமைகளில்) காலை 3-30 மணிக்கு (அ) பூராபிஷேகம் : ரூ. 750/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 2 சிறிய லட்டு, 2 வடைகள். (ஆ) புனுகுப்பாத்திரம் : ரூ. 300/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. (இ) கஸ்தூரிக்கிண்ணம் : ரூ. 150/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. அன்பளிப்பு : |

குறிப்பு :

(1) வரிசை 1 முதல் 4 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே பதிவு செய்து கொள்ளலாம்.

(2) கிடைத்திடும் சீட்டுகளைப் பொறுத்து, ஒரு வருடத்திற்கு முன்பேயே அபிஷேகத்திற்கு முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படும்.

**லட்டுப்படி**

ஆர்ஜிதம் பெரிய லட்டு படி - ரூ. 2500/-
சிறிய லட்டு படி - ரூ. 750/-

**சீட்டு வாங்கிய பக்தரைச் சார்ந்த மொத்தம் ஐந்து நபர்களுக்கு ஏழுமலையான் தரிசன வசதி செய்து தரப்படும். தரிசனத்திற்குப் பிறகு 30 லட்டுகள் வழங்கப்படும்.**



வான் கனவில்வந்து "நான் ஜீயர் மகன் ஆயர்தேவு: எனக்கு வெண்ணெய், நாவற்பழம் முத லானவை கொடும்" என்று கேட்டதாகவும், எங்களாழ்வான் நஞ்சீயரிடம் சென்று "ஜீயரே! உனது மகன் ஆயர்தேவு அதைக்கொடு, இதைக்கொடு என்று கேட்டு என்னைக் குடியிருக்கவொட்டாமல் செய்கி றான்" என்று சொன்னதாகவும், அதைக்கேட்டு நஞ்சீயர், யாரு மறியாதபடி நமது திருவாரா தனப் பெருமாளுக்கு "ஆயர் தேவு" என்று பெயர் வைத்தி ருக்க, அதை உலகறியச் செய்வ தற்காக எம்பெருமான் இப்படிச் செய்வதே! என் வியந்ததாகவும் ஈட்டில் உள்ளது.

கி.பி. பன்னிரண்டாம் நூற் றாண்டில் வாழ்ந்த இம்மஹாசார் யர் நூறு வயது வாழ்ந்தி ருந்தார். நம்பிள்ளை காலம் வரையில் இவர் எழுந்தருளியி ருந்ததாக ஐதிஹ்யங்கள் கூறு கின்றன.

"ஸகல சாஸ்த்ரார்த்தங்க ளும் வல்லவர் எங்களாழ்வான்" என்று நம்பிள்ளை அருளிய தாக ஆறாயிரப்படி குருபரம் பரை கூறுகிறது.

எம்பெருமானார் தம் சரம காலத்தில் இவரைத் திருக்குரு கைப்பிரான் பிள்ளான் திரு வடிகளில் ஆச்ரயிக்கச்செய்தார் என்று குருபரம்பரைப் பிரபாவத் தில் அருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது.

எங்களாழ்வான் சிலகாலம் ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு அருகி லுள்ள கொல்லகொண்டாவில் எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்து வந்தார் என்று வரலாறு கூறுகிறது.





# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித இனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடவப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்குப் பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை ரூ. 15000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை ரூ.5000

இத்திட்டத்தின் கீழ் திருமலை - திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அதல்தாப்பிறகு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

**கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்**

**THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517 501.**

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்

ஸ்ரீமான். உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

த்ரைலோக்யம் மங்களம் குரு-த்ரயோ லோகா ஏவ த்ரைலோக்யம் - ஸ்வார்த்தே ஷ்யஞ்ப்ரத்யயாந்த சப்தம் இது. லோக சப்தம் உலகத்தையும் ஜனங்களையும் காட்டும். 'லோகஸ்து புவநேஜநே' என்பது அமரகோசம். ஆக நீ எழுந்திருந்து மூவுலகங்களையும் மங்களமுடையதாகச் செய் என்றும், ஐச்வர்யம் கைவல்யம் பரமபதம் என்னும் பயனை விரும்பும் மூவகைப்பட்ட ஜனங்களையும் அப்பயன்களாகிய நன்மை பெற்றவர்களாகச் செய் என்றும் பொருள் தேறும். இனி எழுந்திருத்தல் கடைக்கணித்தலுக்கு உபலக்ஷணமாய், உத்திஷ்ட, குரு என்ற லோட்ப்ரத்யயங்கள் ப்ரார்த்தனையிலேயாய், 'துயிலெழவேணும், அங்கணிரண்டும் கொண்டு எங்கண்மேல் நோக்கவேணும், நோக்கி எங்களுக்கு மங்களங்களை உண்டாக்கவேணும்; என்ற பொருளும் கூறத்தகும். இன்னும் லோக்யதே - அனுபூயதே இதி லோக: என்று லோகபதம் அனுபவிக்கப்படும் பலத்துக்கு வாசகமாய், அந்தந்த அதிகாரிகளுக்கு மங்களமாகிய ஐச்வர்யம் முதலிய பலன்களையும் அளிக்க வேண்டுமென்று பொருள்கூறுதலும் ஒன்று.

**மாதஸ் ஸமஸ்தஜகதாம்**
**மதுகைடபாரே: ।**
**வக்ஷோவிஹாரிணி மநோஹரதிவ்ய**
**மூர்த்தே ।**
**ஸ்ரீஸ்வாமினி ச்ரித ஜநப்ரிய**
**தாநசீலே**
**ஸ்ரீவேங்கடேசதயிதே தவ**
**ஸுப்ரபாதம் ।। (3)**

(ப) ஸமஸ்த ஜகதாம்=எல்லாவுலகங்களுக்கும், மாத:=த்ர்யே மதுகைடப அரே: =மது கைட



பன் என்ற அசுரர இருவரையும் அழித்த விஷ்ணுவினுடைய, வக்ஷ: விகாரிணி= திருமார்பில் விளையாடுபவளே, மநோஹ்ர திவ்ய மூரததே=அழகிய உயர்ந்த திருமேனியை உடையவளே, ஸ்ரீஸ்வாமிநி = (எம்) தலைவியே, ச்ரிதஜந ப்ரிய தாநசீலே = தஞ்சமடைந்த மக்களுக்கு விரும்பியதைக் கொடுப்பதையே தன்மையாக உடையவளே, ஸ்ரீவேங்கடேச தயிதே=திருவேங்கடநாதனின் காதலியே, தவ = உனக்கு, ஸுப்ரபாதம்= இது நல்விடிவாகுக.

(க) அனைவர்க்கும், அன்னையாய், திருமாலின் திருமார்பில் அழகிய திருமேனியோடு பொருந்தி, அடைந்தவர் விருப்பத்தை நிறைவேற்றுவதையே இயற்கையாகக் கொண்டுள்ள எம் தலைவியான வேங்கடவன் தேவியே உன் காதலனைத் துயிலெழுப்ப நீ முன்னம் எழுந்திரு.

(வி) இந்த ச்லோகம் தொடங்கியே ஸுப்ரபாதஸ்தோத்ரமாகும். ஸமஸ்தஜகதாம் மாத: - 'த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா' (வி.பு. 1-9-126) எல்லாவுலகங்கட்கும் நீ தாய், தேவர்தலைவரான ஹரியானவர் தந்தை - என்று இந்திரன் பிராட்டியைத் துதித்ததும் மற்றும் காண்க.

மதுகைடபாரே: வக்ஷோவிஹாரிணி - எம்பெருமான் அநிருத்தனாய் அவதரித்து மதுகைடபர்களை வென்றானென்று பெரியோர் பணிப்பர். திவ்ய மால்யாம்பரதரா ஸ்நாதா பூஷணபூஷிதா - பச்யதாம் ஸர்வதேவர்நாம் யயௌ வக்ஷ: ஸ்த்தலம் ஹரே:' (வி.பு 1-9-105) திருப்பாற்கடலில் தோன்றிய ஸ்ரீதேவி நீராடித் திவ்யமான சேலையும் மாலையும் அணிந்து ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவளாய தேவர்கள் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்க ஹரியின் திருமார்பிடத்தை அடைந்தாள - என்றதற்குச் சேர- மதுகைடபாரே: வக்ஷோவிஹாரிணி எனப்பட்டது. விஹரித்தல் களை - தீர்ந்து இன்பமாக இருத்தல்.

மநோஹர திவ்ய மூர்த்தே = எம்பெருமான் மனத்தைப் பறிக்கும் அழகிய உயரந்த திருமேனியையுடையவளே - மூர்ச்சா மோஹ ஸமுச்ச்ராயயோ: என்னும் தாதுவடியாகப் பிறந்த மூர்த்தி சப்தம் மையலூட்டும் நெடுகிய திருமேனியைக் குறிக்கும். திவ்யம் அப்ராக்ருதம், அதாவது ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள பஞ்சபூதங்களாலல்லாமல் பரமபதத்திலுள்ள பஞ்சபூதங்களால் ஆனது பிராட்டியின் திருமேனி எனக.

ஸ்ரீஸ்வாமிநி - எமபெருமான் ஸ்ரீஸ்வாமி - தலைவன், இவள்ஸ்ரீ ஸ்வாமிநீ - தலைவி.

ச்ரிதஜநப்ரிய தாநசீலே-ப்ரிய சப்தத்திற்கு இஷ்டம் என்றும், கணவன் என்றும் இரணடு பொருள்கள். 'அபீஷ்டே - அபீப்ஸிதம் ஹ்ருத்யம் தயிதம் வல்லபம் ப்ரியம்' என்றும், 'தவ: ப்ரிய பதி: பர்த்தா' என்றும் - அமரம் முறையே காண்க. தன்னை அடைந்த ஜனங்களுக்கு இஷ்டமான பலன்களைத் தருவதை இயற்கையாக உடையவளே என்றும் ஆச்ரிதர்க்குத் தன் கணவனைத் தருவதை இயல்பாக உடையவளே என்றும் கருத்துக்கள் கொள்க: பின்னது முப்பத்து மூவர் (திருப்பாவை 20) பாசுரத்தில் உக்கமும் தட்டொளியும் (போலே) உன் மணாளனையும் தந்து இப்போதே எமமை நீராட்டு என்று அநவயித்து ஆசாரயரகள அருளிய பொருளுக்குப பொருந்தும்.

ஸ்ரீவேஙகடேச தயிதே பாவததைப போக்கும் தனமையுடைமையால திருமலைக்கும் ஸ்ரீனிவாஸனுக்கும் வேங்கட என்று பெயர். ஆகையால் இச்சொல் திருவேங்கடத்திற்கு ஈச்வரன அல்லது திருவேங்கடனாகிய ஈசன், அவனுடைய காதலியே என்று பொருள்படும்.

ஸுபரபாதம். இரவு கழிந்து பொழுதுவிடியும் நேரம் ஸுப்ரபாதம் - நல்விடிவு, மங்களகரமான விடிவென்றபடி.

தவ ஸுப்ரபாத மரவிந்தலோசநே,
பவது ப்ரஸந்நமுகசந்த்ரமண்டலே ।
விதிசங்கரேந்த்ரவநிதா பிரர்ச்சிதே
வ்ருஷசைலநாததயிதே தயாநிதே ।। (4)

(ப) அரவிநதலோசனே = தாமரை மலர் போன்ற கண்களை உடையவளே, ப்ரஸந்நமுக சநத்ர மண்டலே= சநதிரமண்டலம் போன்றதாய்த் தெளிந்த திருமுகமுடையவளே, விதி சங்கர இந்த்ரவநிதாபி:=பிரமன் சிவன் இந்திரன் ஆகியவர்களின் மனைவிகளாகிய ஸரஸ்வதி, பார்வதி, சசி தேவிகளால் அர்ச்சிதே= பூசிக்கப்பெற்றவளே, தயாநிதே= தயைக்குப் பிறப்பிடமானவளே வ்ருஷ சைல நாத தயிதே=வ்ருஷாத்ரிநாதன் காதலியே, தவ= உனக்கு, ஸுப்ரபாதம் பவது = (இது) நல்விடிவாக ஆகவேணும்.

(க) தாமரைக் கண்களும் சந்திர முகமும் கொண்டு திருமலைநாதனை உகப்பித்து, ஸரஸ்வதி முதலிய தேவமாதர்களால்

பூசிக்கப்பெற்று, எம்மிடம் தயை மிக்க ஸ்ரீமகாலக்ஷ்மியே உனக்கிது நல்விடிவாகும்.

(வி) அரவிந்த லோசநே-ஏற்கெனவே அழகுடைய தாயின் கண்கள் குழந்தைகளைக் கண்ட மகிழ்ச்சியால் தாமரை மலர் போல் மலர்ந்து சிவக்கும் என்றபடி.

ப்ரஸந்நமுக சந்த்ரமண்டலே-சந்த்ரமண்டலம் முகத்திற்கு ஆஹ்லாத கரத்வத்தில் மட்டும் உபமானம். ப்ரஸாதத்தில் அல்ல. ப்ரஸாதமென்னும் தெளிவு ஸதா களங்கியான சந்திரனுக்கு ஒரு காலும் ஸம்பவியாதன்றோ?

விதிசங்கரேந்த்ரவநிதாபி: அர்ச்சிதே-'தாஸீபூதஸமஸ்த தேவவனிதாம்' (லக்ஷ்ம்யஷ்டோத்திரம்) வேலைக்காரிகளாக எல்லாத் தேவமாதர்களையும் உடையவளை வணங்குகின்றேன் - என்பது காண்க. 'ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜ: ஸதயித: த்வத்தாஸ தாஸீகண:' (சதுச்ச்லோகீ-1) பிரமன் சிவன் முதலிய தேவர்கணங்கள் அவர்தம் மனைவிமார்களோடு கூட உனக்குப் பணியாளர்களும், பணியாட்டிகளும் ஆவர் என்று ஆளவந்தார் அருளியதும் நோக்கத்தக்கது.

வ்ருஷசைலநாத தயிதே - தயிதா = சித்தம் ஆதத்தே - மனதைப் பறிக்கிறாள் என்று. தயிதாசப்தம் அழகிய மனைவியைக் கூறும்.

**தயாநிதே - தயைக்குக் களஞ்சியமானவளே. இவளுடைய புருஷகாரத்தால்தான் எம்பெருமானுக்கும் ஸ்வாதந்த்ர்யம் தலை மடிந்து தயை தலையெடுத்தலால் அவனுடைய தயையும் இவளுடைய தயையால்** பயன்பெறுதல் பற்றி இவளைத் தயைக்களஞ்சியமென்னத் தட்டில்லையன்றே.

*அத்ர்யாதிஸப்தருஷயஸ் ஸமுபாஸ்ய ஸந்த்யாம்,*
*ஆகாசஸிந்துகமலாநி மநோஹராணி ।*
*ஆதாய பாதயுகம்மர்ச்சயிதும் ப்ரபந்நா:,*
*சேஷாத்ரிசேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥ (5)*

(ப) அத்ரி ஆதி ஸப்தருஷய:= அத்திரி முதலிய ஏழு முனிவர்களும், ஸந்த்யாம் ஸமுபாஸ்ய= ஸந்த்யாவந்தனம் செய்துவிட்டு, மநோஹராணி = மனத்தைக் கவர்கிற, ஆகாச ஸிந்து கமலாநி = ஆகாச கங்கையின் தாமரை மலர்களை, ஆதாய = (பறித்து) எடுத்துக்கொண்டு, பாதயுகம் = (உன்) திருவடியிணையை, அர்ச்சயிதும் = அர்ச்சனை செய்வதற்கு, ப்ரபந்நா:= வந்து அடைந்தனர். சேஷாத்ரி சேகர விபோ = ஆதிசேஷ மலைக்குத் தலையணியாகிய அரசே! தவ ஸுப்ரபாதம் = உனக்கிது நல்விடிவு ஆகுக.

(க) திருமலைநாதனே! அத்திரி முதலான முனிவர் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு உன்னை வழிபடுவதற்கு ஆகாச கங்கையிலிருந்து தாமரைப் பூக்களைப் பறித்துக் கொண்டு வந்து காத்திருக்கின்றனர். நீ திருக்கண் மலர வேண்டும்.

**(வி) ஸப்தரிஷிகளாவர் - மரீசி அத்ரி அங்கிரஸ்ஸு புலஸ்த்யர் புலஹர் க்ரது வஸிஷ்டர் ஆகியோரென்று சிலர் கூறுவர். வஸிஷ்டர் காச்யபர் அத்ரி ஜமதக்நி கௌமதமர் விச்வாமித்ரர் பரத்வாஜர் ஆகிய எழுவர் என்று விஷ்ணுபுராணம் (31-1-32) கூறும்.**

ஸந்த்யா என்பது முச்சந்தி வேளைகளுக்கும், அப்போது ஜபிக்க வேண்டிய காயத்ரீ திருவஷ்டாக்ஷரம் முதலிய மந்த்ரங்களுக்கும் அவற்றால் ப்ரதிபாதிக்கப்படுகின்ற எம்பெருமானுக்கும் பெயர். ஆக ஸந்த்யாம் ஸமுபாஸ்ய என்பதற்கு - காலையில் ஜபிக்கத்தக்க மந்திரங்களை ஜபித்து அவற்றுக்கு உள்ளீடான உன்னை தியானித்துவிட்டு என்பது பொருள்.

'கமலாநி ஆதாய பாதயுகம் அர்ச்சயிதும்' என்று மலர் பறிப்பதற்கும் அர்ச்சனை செய்வதற்கும் முனிவர்களே கர்த்தாக்களாகக் குறிக்கப்படுவது கொண்டு, இம்முனிவர்க்கு அர்ச்சகர் மூலமாக வல்லாமல் பெருமாள் திருவடிகளில் நேராகவே அர்ச்சனை செய்ய உரிமையுள்ளமை புலப்படும்.

சேஷாத்ரி சேகர விபோ - சேஷாத்ரி - ஆதிசேஷமலை' சேகரம் = சிரோபூஷணம். 'விபு:- ப்ரபௌ ஸர்வகதே' என்னும் மேதிநீ கோசத்தின்படி ஆற்றலுள்ளவன் எங்கும் நிறைந்தவன் என்றுள்ள இரண்டு பொருள்களும் பகவானிடம் பொருந்தும்.

*பஞ்சாநநாப்ஜபவஷண்முக வாஸவாத்யா:,*
*த்ரைநவிக்ரமாதிசரிதம் விபுதா: ஸ்துவந்தி ।*
*பாஷாபதி: படதி வாஸரசுத்திமாராத்,*
*சேஷாத்ரிசேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥ (6)*

**(ப) பஞ்சாநந அப்ஜபவ ஷண்முக வாஸவ ஆத்யா:= சிவன் பிரமன் முருகன் இந்திரன் முதலிய, விபுதர்: = தேவர்கள், த்ரைவிக்ரம ஆதிசரிதம் = மூவடியால் உலகளந்தது முதலிய (உன்) சரிதங்களை, ஸ்து**

வந்தி = (சொல்லித்) துதிக்கின்றனர், பாஷாபதி: = ப்ருஹஸ்பதி, ஆராத் = அருகில், வாஸரசுத்திம் = (திதி வாரம் நக்ஷத்திரம் யோகம் கரணம் ஆகிய) தினத்தின் சுத்தியை, படதி = ஓதுகிறார். சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம்.

(க) திருமலையரசே பிரமன் முதலிய உயர்ந்த தேவர்கள் உலகமளந்தது தொடக்கமான உன் வீரசரிதங்களைச் சொல்லிக்கொண்டு நிற்கின்றனர். குரு பஞ்சாங்கம் படிக்கிறார். உனக்கிது நல்விடிவாகுக.

(வி) பஞ்சாநந: = ஐந்து தலைகளையுடைய சிவபெருமான். அப்ஜபவ: = திருமாலின் திரு நாபிக் கமலத்தில் தோன்றிய பிரமதேவன், ஷண்முக: = ஆறு க்ருத்திகா தேவதைகளின் முலைப்பாலை ஒருகாலே உண்ணுவதற்கு உறுப்பான, ஆறு முகமுடைய ஸுப்ரஹ்மண்யன், வாஸவ: = அஷ்டவஸுக்களுக்குத் தலைவனான இந்திரன்.

த்ரைவிக்ரம ஆதிசரிதம் - திருமாலின் சரிதங்களில் திரிவிக்கிரமனாக மூன்றடியால் உலகமளந்த சரிதம் மிக உயர்ந்ததாகையால் அதை முக்கியமாக வைத்து அது முதலிய சரிதங்களை என்றார். விபுதா: = விசேஷண புத்த்யந்தே -. நம்மை விட நன்றாகவும் அதிகமாகவும் அறிகின்றவர்களாகையால் இது தேவர்களுக்குக் காரணப் பெயர்.

பாஷாபதி: = வாக்பதியான ப்ருஹஸ்பதி, இச்சொல் ஸரஸ்வதீபதியான பிரமதேவனையும் குறிக்குமாயினும், பஞ்சாங்கம் படிப்பது புரோகிதரின் காரியமாகையால் இங்குத் தேவ புரோகிதரான குருவைக் குறித்தது. திருவரங்கத்தில் இப்போதும் பஞ்சாங்கம் வாசிப்பது ஸ்ரீரங்கேச புரோகிதரான பட்டரே என்பது அறியத்தக்கது. திருமலையில் இப்போது காலைத் தோமால ஸேவைக்கும் அர்ச்சனைக்கும் இடையில் நடைபெறும் பஞ்சாங்க படனம் திருவரங்கத்தில் போல் காலை விச்வரூபத்தின் போது முன்ப நடைபெற்று வந்தமை இந்த ச்லோகம் கொண்டு அறியலாகும்.

வாஸர சுத்தி - தினத்தின் நல்ல சமயம். இது அசுத்திக்கும் உபலக்ஷணம் - த்யாஜ்யம் முதலியனவும் படிக்கப்படுவதனால் என்று அறிக.

(தொடரும்)

************************

## தினசரி உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) கல்யாணோத்ஸவம் | ரூ. 2500/- காலை 10 மணிக்கு. 5, நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : இரவிக்கைத்துண்டு, உத்தரீயம், பெரியலட்டு 5 வடை 5, அப்பம் 5, தோசை 5, சர்க்கரைப் பொங்கல், பொங்கல், புளியோதரை, தத்யோதனம், (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு.) |
| 2) சிறப்பு கல்யாணோத்ஸவம் | ரூ. 750/- காலை 10 மணிக்கு. 2 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : உத்தரீயம் ஒன்று, இரவிக்கைத்துண்டு ஒன்று, பெரியலட்டு, 1 வடை 1 |
| 3) ஆர்ஜித பிரமோத்ஸவம் | ரூ. 500/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 1 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். தரப்படும் வாகனங்கள் : (1) பெரிய சேஷ வாகனம், (2) வெள்ளி கருட வாகனம் (3) வெள்ளி அனுமந்த வாகனம். |
| 4) தோலோத்ஸவம் அல்லது ஊஞ்சல் சேவை | ரூ. 750/- மதியம் 1-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயிலுக்குள் உள்ள கண்ணாடி அறையில் இச்சேவை நடைபெறும். அன்பளிப்பு: சேஷவஸ்த்ரம் ஒன்று. |
| 5) வசந்தோத்ஸவம் | ரூ. 3000/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 2 மணிக்கு. 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 6 வடைகள், 20 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப்பொங்கல் |
| 6) ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. 500/- மாலை 5-30 மணிக்கு. கோயில் வளாகத்திற்கு வெளியே நடைபெறும் சேவைக்குப்பிறகு, வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக 5 நபர்கள் தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம் ஒன்று. |

மேற்குறிப்பிட்ட சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்து கொள்ளலாம்.

# ஸ்ரீதாயுமான சுவாமிகள்

திரு. பஞ்சு அரங்கநாதன் - கீழரங்கம்.

## முன்னுரை :

'எல்லோரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லால் வேறு ஒன்று அறியேன்', 'எவ்வுயிரும் என் உயிர் போல் எண்ணி இரங்குவேன்' என்பது போன்ற சாதி, சமய, இன, மத, மொழி, நாட்டு பேதங்களை மறந்து ஆன்மநேய உணர்வில் பெருங்கருணையுடன் அருள் மொழிகளை உலகுக்கு அருளியவர் நிறைஞானியாகிய ஸ்ரீதாயுமானவ சுவாமிகள் ஆவார். அவருடைய அருள் வரலாற்றை ஒரு சிறிது காணலாம்.

## திருஅவதாரம் :

அன்றைய திருச்சிராப்பள்ளி (TRICHY) நகரை தலைநகராகக்கொண்டு கி.பி. 1704 முதல் கி.பி. 1731 முடிய விஜயரங்க சொக்கநாத நாயக்கர் என்பவர் ஆட்சி செய்துவந்தார். இம்மன்னரிடம் சம்பிரதி (Chief Secretary) ஆக கேடிலியப்பப் பிள்ளை என்பவர் பணிபுரிந்து வந்தார். இவர் இன்றைய நாகப்பட்டினம் காயிதே மில்லத் மாவட்டத்து கடற்கரை நகரமாகிய வேத ஆரண்யம் (திருமறைக்காடு) என்ற ஊரைச் சேர்ந்த சைவ வேளாள மரபினர் ஆவார். இவருடைய மனைவி பெயர் கெஜவல்லி அம்மை ஆகும். இப்பெற்றோருடைய முதல் மகன் சிவ சிதம்பரம் பிள்ளை. ஆனால் மகப்பேறு அற்ற தன் சகோதரனுக்கு முதல் குழந்தையை சுவீகாரம் செய்து கொடுத்து விட்டார்.

## தாயுமானவன் :

கேடிலியப்பப்பிள்ளை, கெஜவல்லி அம்மை தம்பதிகளுக்கு அடுத்த மகப்பேறு வாய்க்காமலேயே இருந்தது. சுவீகாரம் கொடுத்த குழந்தையையும் மீண்டும் பெற்று உரிமை கொண்டாட இயலாது. எனவே தம்பதிகள் இருவரும் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை (Rock Fort) கோவிலில் எழுந்தருளி உள்ள ஸ்ரீதாயுமானவ சுவாமிகளை காலை, மாலை ஆகிய இரண்டு வேளைகளிலும் உள்ளன்போடு வழிபட்டுவந்தனர்.

## பெயர்க்காரணம் :

திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை கோவிலில் உள்ள இறைவனின் பெயர் நன்றுடையான் ஆகும்.

"நன்று உடையானை, தீயது
இல்லானை நரைவெள்ளேறு
ஒன்று உடையானை, உமை ஒருபாகம்
உடையானை
சென்று அடையாத திருஉடையானை
சிராப்பள்ளிக்
குன்று உடையானைக்கூற என்
உள்ளம் குளிருமே".
-திருஞானசம்பந்தர் தேவாரம்(1-28-1)

மேலும் தாயுமானவர் என்ற பெயரும் இறைவனுக்கு வழங்கி வருகிறது. இதற்கு ஒரு ஐதிகம் உண்டு.

## செட்டிப்பெண்ணின் தாயானவர் :

பூம்புகாரைச் சேர்ந்த இரத்தினகுப்தன் என்ற வணிகர் குலத் தலைவன் தன் மகள் இரத்தினாவதியை திருச்சிராபள்ளியைச் சேர்ந்த தனகுப்தன் எனும் வணிகனுக்குச் சிறப்பாகத் திருமணம் செய்து கொடுத்தான். இரத்தினாவதி தினமும் மலைக்கோட்டை கோவில் சென்று இறைவனை வணங்கி வந்தாள். இறை அருளால் கர்ப்பவதி ஆகி பேறு காலமும் வந்தது. பேறு கால உதவி செய்ய பூம்புகாரிலிருந்து வந்த தாய் காவிரி வெள்ளத்தால் வீடு போய்ச் சேரமுடியவில்லை. பிரசவ நேரம் வந்துவிட்டது. திக்கற்ற செட்டிப் பெண் இரத்தினாவதி மலைக்கோட்டை இறைவனை வேண்டவே, இறைவன் பெருங்கருணையோடு தாய்வேடம் பூண்டு பிரசவம் பார்த்து சிலநாள் பணிவிடையும் செய்து வந்தார். வெள்ளம் வடிந்தபின் வீடு வந்தாள் நிஜத்தாய். இரண்டு தாய்களைக் கண்ட இரத்தினாவதி குழம்ப இறைவன் உருக்கரந்து விண்ணில் தோன்றி செட்டிப் பெண் பக்திக்குக் கட்டுப்பட்டு தாயுமானவரலாற்றைக் கூறினார். மக்கள் எல்லோரும் அன்று முதல் மலைக்கோட்டை இறைவனை தாயுமானவர் என்றே போற்றுகிறுர்கள். இன்றும் பிரம்மோற்சவத்தில் ஐந்தாம் நாள் விழாவாக இறைவன் தாயுமான வரலாறு கொண்டாடப்படுகிறது.

## குழந்தை தாயுமானவன் :

இப்படிப்பட்ட சிறப்புடைய திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை

தாயுமானவரை அனுதினமும் வணங்கி வந்த கேடிலியப்பப் பிள்ளை, கெஜவல்லி அம்மாளுக்கு நாளடைவில் மகப் பேறு உண்டாகி ஒரு ஆண் குழந்தை பிறந்தது. ஸ்ரீதாயுமானவ சுவாமியின் அருளால் பிறந்த குழந்தைக்கும் பெற்றோர் தாயுமானவன் என்றே பெயரிட்டனர். இக்குழந்தையே பிற்காலத்தில் சமரச நோக்குடன் பல அருட்பாடல்களை அருளிய நிறைஞானி தாயுமானவ அடிகள் ஆகும்.

## இளமைப் பருவம் :

பிறந்த குழந்தையின் ஜாதகத்தைக் கணித்த குடும்ப ஜோதிடர் குழந்தை ஆன்ம போதம் பெற்று மகா ஞானியாகும் என்று கூறி பெற்றோருக்கு மகிழ்வை அளித்தார். குழந்தைக்கு ஐந்து வயது ஆனவுடன் 'சிற்றம்பல தேசிகர்' என்பவரிடம் கல்விகற்க அனுப்பினர். சிறுவன் தாயுமானவன் கல்வி கேள்விகளில் சிறந்து உவமையிலாக் கலைஞானம் பெற்று விளங்கினான். வடமொழி, தென்மொழிப் புலமையும், கணிதம், ஜோதிடம் ஆகிய துறைகளில் தேர்ச்சியும் அடைந்து வந்தான். மேலும் சைவ சமய ஞானிகளின் அருள் நூல்களாகிய தேவாரம், திருவாசகம், திருப்புகழ், சைவ ஆகமங்கள் இவற்றைக் கசடறக்கற்று வந்தான்.

## மௌன குரு அருள் :

இளைஞன் தாயுமானவன் தன் அருமைப் பெற்றோரைப் போன்றே நாள்தோறும் மலைக் கோட்டை தாயுமானவர் கோவிலுக்கும், திருஆனைக்கா அகிலாண்ட நாயகி கோவிலுக்கும் சென்று வழிபட்டு வந்தான். ஒருநாள் தாயுமானவரை வணங்கி வரும்பொழுது வழியில் நின்றுகொண்டிருந்த முனிவர் ஒருவர் இளைஞனின் கவனத்தைக் கவர்ந்தார். அவர்தாம் திருமந்திரம் என்னும் 3000 அருட் பாடல்களை அருளிய தவராஜயோகி திருமூல தேவரின் மரபில் வந்த மௌன குரு ஆவார். அவர் அதிகம் பேசமாட்டார் எனவே மௌன குரு என்பர் பெரியோர். காந்தம் இரும்பை ஈர்ப்பது போல மௌனகுருவின் திருவடிகளில் இளைஞன் வீழ்ந்தான். குருவும் சிஷ்யனை ஆட்கொண்டார். தியானம், ஜபம், சந்தேகம் தீர்த்தல் மற்றும் பணி விடை போன்ற கடமைகளை இளைஞன் பொறுப்பாகச் செய்து குருநாதரின் நல்லெண்ணத்தையும், கருணையும் பூரணமாகப் பெற்றான்.

## சும்மா இரு :

நல்லமுறையில் சென்று கொண்டிருந்த குரு சிஷ்ய பாவனையில் பிரிவு ஏற்பட்டது. ஆம். மௌன குரு தம தவயோக சித்திகளைப் பெறுவதற்காக கானகம் சென்றார். குருவின் பிரிவை ஆற்றாத சீடன் மனம் வருந்திப் புலம்பவே விரைவில் மீண்டும் வருவதாகக் கூறி "சும்மா இரு" என்று இந்த உபதேசித்தார். தாயுமானவருடைய பல பாடல்களில் 'சும்மா இரு' என்ற மந்திரம் வருகிறது.

## சும்மா இருப்பது எப்படி?

ஒரு கோயிலில் ஆண்டுத் தணிக்கை. வரவு செலவுக் கணக்கில் தினமும் 'சும்மா இருக்கும் சாமியாருக்கு ஒரு பட்டை சாதம்' என்று எழுதியிருந்தது. தணிக்கை அதிகாரிக்கு கோபம். எழுத்தரைக்கூப்பிட்டு 'சும்மா இருக்கும் சாமியாருக்கு ஏனய்யா தண்டச்சோறு போட வேண்டும். இது தெய்வ சொத்து. ஏதாவது வேலை கொடு. பூ கட்டட்டும், புல் செதுக்கட்டும்' என்றார். எழுத்தர் 'சரி அய்யா, ஆனால் அந்த சாமியாரிடம் தயவு செய்து நீங்களே கூறுங்கள்' என்றார்.

தணிக்கை அதிகாரி:- எனக்கென்ன அய்யா பயம்? கூப்பிடு அந்த சாமியாரை.

*சாமியார் வருகிறார்*

தணிக்கை அதிகாரி: யோவ் சாமியாரே! நீர் ஒரு வேலையையும் செய்யாமல் சும்மா இருந்து கொண்டே கோயிலில் இருந்து பட்டை சாதம் சாப்பிடுகிறீர். கோயில் சொத்து குலநாசம். இனிமேல் சும்மா இருந்தால் சாப்பாடு கிடையாது. ஏதாவது வேலை செய்யும். பூப் பறி. பூ கட்டு, புல் வெட்டு, மணி அடி, ஏதாவது செய்.

சாமியார்: சரி அய்யா. நீர நல்லவர். தெய்வத்திற்குத் தானே வேலை செய்யச் சொல்கிறீர். கட்டாயம் செய்கிறேன். ஆனால் உம்மால் ஒரு நிமிடம் சும்மா இருக்கமுடியுமா?

அதிகாரி: தாராளமாக, ஒரு நிமிடம் என்னய்யா? ஒரு மணிநேரம் இருக்கிறேன்.

சாமியார: சரி இப்படி சும்மா உட்காருங்கள்.

சரியாக ஒரு நிமிடம் செல்கிறது. சாமியார் அதிகாரியின் கன்னததில் நான்கைந்து அறை விடுகிறார்.

அதிகாரி: (கோபத்துடன தடுத்தி நிறுத்தி) அடேய்

முட்டாளே ஏனடா அடிக்கிறாய்? உனக்கு இனிமேல் வேலை செய்தாலும் சாப்பாடு கிடைக்காது.

சாமியார்:- குழந்தாய்! எனக்கு சாப்பாடு முக்கியமில்லை. உன்னை ஒரு நிமிடம் சும்மா இருக்கச்சொன்னேன். நீ ஒரு நிமிடம் என்ன, ஒரு வினாடி கூட சும்மா இருக்கவில்லை. அதனால்தான் அடித்தேன்.

அதிகாரி: என்ன சாமி. உங்கள் பக்கத்தில் தானே சும்மா உட்கார்ந்திருந்தேன். இப்படிப் பொய் சொல்கிறீர்களே?

சாமியார்: அப்பா, நீ உட்கார்ந்து இருந்தது வாஸ்தவம்தான். ஆனால் சும்மா இல்லையே. ஒரு நிமிடத்திற்குள் மாத வருவாய், வீடு கட்டுவது, வயல் வாங்குவது, பெண் கல்யாணம் என்று எத்தனை சிந்தனைகள்! மன ஓட்டங்கள்!! நீயா சும்மா இருந்தாய்?

அதிகாரி சாமியார் காலில் விழுகிறார். 'அய்யா சும்மா இருப்பது என்றால் என்ன என்று புரிந்தது. என்னை மன்னித்து விடுங்கள். இனிமேல் சும்மா இருக்கும் சாமியாருக்கு மூன்று வேளையும் சாப்பாடு தர உத்தரவு போடுகிறேன். நீங்கள் மகா ஞானி. என்னை மன்னித்து அருள் வழங்குக.'

ஆகவே சும்மா இரு என்பது ஞான வாக்கியமாகும். முப்பொறிகளையும் அடக்கி மனதை அடக்குவதாகும். இத்தகைய நிலையையே குருவான மௌன குரு சீடன் தாயுமானவனுக்குப் போதித்தார். பின் காடு சென்றார். குருநாதர் உபதேசித்த மொழிகளைப் பின்பற்றிச் சீடனும் ஆத்ம சாதனத்தில் முன்னேறிக்கொண்டு இருந்தான்.

## இல்வாழ்க்கை :

குருவைப் பிரிந்த சீடனின் வாழ்க்கையில் முன் வினைகள் தங்கள் கைவரிசையைக் காட்டின. ஆம். பெற்றோர் விருப்பப்படி மட்டுவார் குழலி என்னும் பெண்ணை மணந்து முறைப்படி இல்லறம் நடத்தினார் சீடர் தாயுமானவன். இத்தம்பதிகளுக்கு 'கனக சபாபதி' என்னும் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த சிலநாட்களிலேயே தாய் இறந்தார். குழந்தையின் பராமரிப்பை வேதாரண்யத்தில் உள்ள தமையன் சிவசிதம்பரம் பிள்ளை ஏற்றுக்கொண்டார். மேலும் சீடனுடைய தந்தை கேடிலியப்பப்பிள்ளையும் சிவகதி அடைந்தார்.

## சம்பிரதி தாயுமானவர் :

திருச்சி அரசர், தந்தை இறந்தபின் அவர் மகன் தாயுமானவனை அழைத்து சம்பிரதி பொறுப்பை ஏற்குமாறு வற்புறுத்தவே மன்னரின் அன்பிற்கும் அபிமானத்திற்கும் கட்டுப்பட்டு மௌனகுருவின் சீடனாயிருந்த தாயுமானவர் திருச்சிராப்பள்ளி அரசாங்கத்தின் சம்பிரதி ஆனார்.

## அலைகடலும், ஆழ்கடலும்:

திருச்சிராப்பள்ளி அரசாங்கத்தின் சம்பிரதி ஆகப் பணியாற்றிய தாயுமானவ பிள்ளை அப்பொறுப்பை செம்மையாக நிறைவேற்றினார். ஆட்சி முறையில் மக்களுக்கு முடிந்த நன்மைகளை செய்வதற்காக புதிய நல்ல திட்டங்களைத் தீட்டுவதும் அவற்றைச் செயற்படுத்தவும் மிகக் கடினமாக உழைத்தார். அவரது தின சரி வாழ்க்கை சுறுசுறுப்பாகவும், பரபரப்பாகவும் இருந்தது. இந்நிலையை ஒரு பெருங்கடலின் மேற்பரப்பிற்கு ஒப்பிடலாம். ஓயாத அலைகளின் ஆரவாரமும், படகுகள், கட்டுமரங்களின் இரைச்சலும் மக்களின் கூச்சலும் பெருங்கடலின் மேற்பரப்பை பரபரப்பாகக் காட்டும். அதே நேரத்தில் மகா சமுத்திரத்தின் உட்புறமோ மயான அமைதியில் இருக்கும். அதைப்போல மௌனகுருவின் சீடரான தாயுமானவன் மனமோ பரநாட்டத்தில் ஆழ்ந்து ஈடுபட்டு இருந்தது. குருநாதர் உபதேசித்த 'சும்மா இரு' என்ற சொற்படி தாயுமானவர் தியானம், ஜபம், தபம், ஆகிய சாதனைகளை உலகத்தவர் அறியாமலே செய்து வந்தார்.

ஆனால் தாயுமானவர் பெருமையை உலகம் அறியும்படி இறைவன் திருவிளையாடல் செய்தார்.

## திருஆனைக்காவில் தீ :

ஒருநாள் அரசவையில் முக்கிய ராஜாங்க காரியங்கள் சம்பந்தமாக மந்திர ஆலோசனை நடைபெற்றுக்கொண்டிருந்தது. தன் கையில் மிக முக்கியமான அரசாங்கப் பத்திரம் ஒன்றை வைத்துப் படித்துக் கொண்டிருந்த சம்பிரதி தாயுமானவபிள்ளை திடீரென்று அந்தப் பத்திரத்தைத் தன் இரண்டு கைகளாலும் கசக்கித் தூள் தூளாக்கிப் பாழாக்கினார். அரசவையில் இருந்த மந்திரி பிரதானிகள் அனைவரும் சம்பிரதியின் பொறுப்பற்ற செயலால் அதிர்ச்சியும் ஆத்திரமும் அடைந்தனர். மிகவும்

கோபமடைந்த ராணி மீனாட்சி தேவி அவர்கள் சம்பிரதியின் பொறுப்பற்ற செயலுக்கு விளக்கம் வேண்டினார்.

### சம்பிரதி :

"ராணி அவர்களே. முக்கியமான பத்திரத்தை பாழாக்கியதற்கு வருந்துகிறேன். இருப்பினும் திருஆனைக்கா கோவிலில் எழுந்தருளி இருக்கும் அன்னை அகிலாண்டேசுவரித் தாயின் புடவையில் அர்ச்சகர் காட்டிய கற்பூரத்தீபம் தவறி விழுந்து அதனால் புடவை தீப்பிடித்துக்கொண்டது. என் அகக்கண்ணில் தெரிந்த இந்தக் காட்சியால் பதற்றமடைந்து என்ன செய்கிறோம் என்று தெரியாது தீயை அணைப்பதாக எண்ணி பத்திரத்தை வீணுக்கி விட்டேன். அறியாமல் செய்த தவறுக்கு வருந்துகிறேன்.

### ராணி :

யாரங்கே! உடனே திரு ஆனைக்கா ஆலயம் சென்று தீ விபத்து ஏற்பட்டதா என்று விசாரித்து வருக.

சில மணிநேரத்திற்குப்பின் ஆலய அதிகாரிகள் நேரில் வந்து தற்செயலாக நேர்ந்த தீ விபத்தையும், உடனடியாக தீ அணைக்கப்பட்ட விதத்தையும் விபரமாகக் கூறினார். ராணி மீனாட்சி தேவியும், மந்திரி பிரதானிகளும் இதர பணியாளர்களும் வியப்பும் ஆச்சரியமும் அடைந்தனர். சம்பிரதியாகப் பணியாற்றி தாயுமானவ பிள்ளை ஞானமும், பக்தியும் பரநாட்டமும் உடைய ஞானி என உணர்ந்தனர்.

### ஸ்ரீதாயுமானவ அடிகள் :

ராணி உட்பட அனைவரும் சம்பிரதி திருவடிகளில் வீழ்ந்து வணங்கி 'தங்கள் ஆணைப்படி செயல்படுவது எங்கள் பாக்கியம்' என்று விண்ணப்பித்தனர். சம்பிரதி தாயுமானவபிள்ளையும் ராணியைப் பார்த்து 'தாயே என்மனம் உலகப் பொருளகளில் செல்லாது இறையருளைத் தேடுகிறது. என்னை சம்பிரதி பதவியிலிருந்து விடுவித்து என் போக்கில் போக அனுமதிக்க வேண்டுகிறேன் என்ருர். மனமில்லாமலே அரசாங்கத்தில் அரை மனத்தோடு அனுமதித்தனர். இதுவரை நாடாளும் வேந்தனுக்கு அடுத்த நிலையில் இருந்த சம்பரதி தாயுமானவ பிள்ளை இப்பொழுது துறவி வேந்தன் மௌனகுருவின் சீடன் தாயுமானவ அடிகளாய் மாறினார்.

### சந்நியாசம் :

அரசாங்கத்தில் இருந்து வெளியேறிய மாமுனிவர் இறைவன் திருவருளால் மீண்டும் தன் குருநாதர் தவராஜ யோகி மௌனகுருவைத் தரிசித்தார். முதல்முறை சந்தித்தபோது சீடனின் பிராரப்த கர்மங்களின் பலனை அநுபவிக்கும் பொருட்டு குருநாதர் பிரிந்தார். இம்முறையோ சீடன் எல்லா வினைகளையும் நுகர்ந்து முடித்துவிட்டார். ஆகவே இம்முறை குருநாதர் சீடனுக்கு முறைப்படி சந்நியாச ஆஸ்ரமம் வழங்கி துறவு நிலை அருளினார். முதல் குருவாகிய ஸ்ரீதட்சிணமூர்த்தியின் மானுடப் பிரிதிநிதியாக விளங்கிய மௌனகுரு இளந்துறவி தாயுமானவ அடிகளுக்குப் பேசாமலே ஆன்மீகப் பெருநிலையை உபதேசித்தருளி தம் யதாஸ்தானத்திற்கு ஏகினார்.

### போற்றுதலும் தூற்றுதலும்:

சந்நியாச ஆஸ்ரமம் மேற்கொண்ட அடிகள் கௌபீனதாரியாக (கோவணம்) திருச்சிராப்பள்ளி மாநகரைச் சுற்றி வசித்து வந்தார். அரசருக்கு அடுத்த நிலையில் ராஜரீக உடையணிந்து நகரை உலா வந்தவர், இப்பொழுது வெறும் கௌபீனதாரியாக ஆண்டிக்கோலத்தில் பிச்சை ஏற்று வாழ்ந்தார். அடிகளின் பரநாட்டத்தையும், வைராக்கிய சிந்தையையும் சிலர் புகழ்ந்து போற்றினர். பகட்டான வாழ்வை வெறுதது பரதேசியான் பைத்தியக்காரன் என்று சிலர் இகழ்ந்து தூற்றினர். ஆனால் அடிகளோ புகழையும், இகழையும் பொருட்படுத்தாது இறைவழிபாட்டிலேயே வாழ்ந்தார்.

பரம பக்தரும், முடிவேந்தர் சிகாமணியுமான குலசேகர் அரச வாழ்வைத் துறந்து அரங்கனின் தொண்டில் ஆழ்வாரான போது அவரை பேய் பிடித்தவன் என்று தூற்றியது உலகம். அரங்கன் அருளும் அற்புத வாழ்வை மறந்து உலகியலில் உழலும் மக்களை பேயர் என்ருர் குலசேகரர். தாயுமானவ அடிகளும் சுகபோகங்களைத் துறந்ததற்காகக் குலசேகரப்பெருமாள் போன்றே சிலரால் தூற்றப்பட்டுள்ளார் என்பது கவனிக்கத்தக்கது. குலசேகரரது திருப்பாடலைக் காண்க.

"பேயரே எனக்கு யாவரும்!
யானும் ஓர்
பேயனே எவர்க்கும்! இது
பேசி என்?
'ஆயனே! அரங்கா!!' என்று
அழைக்கின்றேன்
பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே.
(குலசேகரர்-பெருமாள் திருமொழி3-8)
(நாலாயிரதிவ்யப்பிரபந்தம்
பாடல்675)

## குளிரில் நடுங்கிய பராசக்தி :

அடிகள் குளிரகாலத்தில் போர்வை ஏதும் இன்றி நடமாடிககொண்டு இருந்ததைக் கணட அன்பர் ஒருவர் காஷ்மீர் சால்வையை பணிவுடன் அணிவிததார். சில தினங்கள் அடிகள் அதை அணிந்திருந்தார். அடுத்த சில தினங்களில் சால்வையை ஒரு ஏழை வேலைக்காரப்பெண் அணிந்து வந்தாள். விசாரித்த போது பரதேசி ஒருவர் கொடுத்ததாகக் கூறினாள். மேற்கூறிய அன்பர் அடிகளிடம் சால்வையைப் பற்றிக் கேட்டபோது "அன்னை பராசக்தி குளிரில் நடுங்கிக் கொண்டு இருந்தாள். நான் வணங்கும் தெய்வமாகிய அம்பிகைக்கு சால்வையை சாத்தினேன்" என்றுர் அடிகள். நம் கண்களுக்கு ஏழை வேலைக்காரியாகத் தோன்றும் பெண், அடிகளுக்கு அன்னை பராசக்தியாகக் காட்சி தருவது அடிகளின் அருள் நிலையையே காட்டுகிறது.

## தீர்த்த யாத்திரை :

பாரத தேசப் பண்பாட்டின் படி தாயுமானவ அடிகளும் புண்ய ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்றுர். விராலி மலைக்கு சென்று முருகனிடம் அருள் பெற்று சித்தர்கள் சிலரது கூட்டுறவைப் பெற்றுர். இராமேஸ்வரம் சென்று இராமநாதர், பர்வத வர்த்தினியை வழிபட்டு பல பாடல்கள் பாடியுள்ளார். பிறகு இராமநாதபுரம் சென்று பரநிஷ்டையில் மூழ்கினர்.

## சமாதி அடைதல் :

தாயுமானவ அடிகள் தம் 76வது வயதில் கி.பி. 1783ல் சுபகிருது வருஷம் தைமாதம் விசாக நடசததிரத்தில் மகா சமாதி அடைந்தார். அடிகளுடைய ஜீவசமாதி திருக்கோயில் இராமநாதபுரததிற்கு அருகே லட்சுமிபுரம் என்னும் ஊரில் உள்ளது. இக்கோயில் திருப்பராய்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவனத்தினர் நிர்வாகத்தில் மிக நல்ல முறையில் பராமரிக்கப்பட்டு வருகிறது. ஆன்மீக நாட்டம் உடையவர்கள் தம் வாழ்வில் ஒரு முறையேனும் ஸ்ரீதாயுமான அடிகள் ஜீவசமாதி திருக்கோயிலை வழிபடடு வரலாம்.

## தெய்வ இலக்கணம் :

ஸ்ரீதாயுமானவ அடிகள் அருளிய மொத்தப் பாடல்கள் 1,452 ஆகும். இவர் பாடல்களில் பொதுமை உணர்வு அதிகம் உள்ளது. மதவாதிகள் எல்லாம் தமது தெய்வம், எமது தெய்வம் என்று வாதிடும் நிலையில் அடிகள் கூறும் தெய்வ லட்சணம் இதோ.

"அங்கு, இங்கு என்னாதபடி எங்-
கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்-
தியாகி அருளொடு நிறைந்-
தது? தன் அருள்வெளிக்கு
உள்ளே அகிலாண்டகோடி எல்-
லாம்

தங்கும் படிக்கு இச்சைவைத்து
உயிர்க்கு உயிராய்த் தழைத்தது
எது? மனவாக்கினில் தட்டா-
மல் நின்றது எது? சமய
கோடிகள் எல்லாம் தம் தெய்-
வம் எம் தெய்வம் என்று

எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கு இட-
வும் நின்றது எது? எங்க-
ணும் பெருவழக்காய் யாதினும்
வல்ல ஒரு சித்து ஆகி இன்-
பமாய் என்றைக்கும் உள்ளது
எது? மேல்

கங்குல் பகல் அறநின்ற எல்லை
உளது எது? அது கருத்திற்கு
இசைந்தது அதுவே; கண்டன
எல்லாம் மோன உரு வெளி-
யெது ஆகவும் கருதி அஞ்சலி
செய்குவாம்.

## ஆசைக்கோர் அளவில்லை :

ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்றுர் புத்தர். ஆசை அறுமின்கள் என்றுர் சிவவாக்கியர். ஒரு மனிதனின் இன்றியமையாத அடிப்படைத் தேவை ஒருபிடிசோறு, ஒரு முழத்துணி, ஆறடி நிலம் அவ்வளவுதான். ஆனால் மனிதனோ பூமியை மட்டுமல்ல வானையும், கடலையும் ஆள நினைக்கிறுன். அமைதியான, இன்பமான வாழ்க்கையை துன்பமும், துயரமும் நிறைந்த சோதனைக்களமாய் மாற்றி வேதனை அடைகிறுன். ஆனால் நன்ருக யோசித்துப் பார்த்தால் உள்ளதே போதும் என்று உணர்ந்து இறைவனை வணங்கி நற்கதி அடைவதே சிறப்பாகும். ஸ்ரீதாயுமானவ அடிகளின் அருட்பாடலை பார்ப்போம்.

"ஆசைக்கோர் அளவு இல்லை, அகிலம்
எல்லாம் கட்டி ஆளினும் கடல்
மீதிலே ஆணை செல்லவே
நினைவர், அளகேசன் நிகராக
அம்பொன் மிக வைத்த பேரும்

நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்-
திடுவர், நெடுநாள் இருந்த
பேரும் நிலையாகவே இனும்
காயகற்பம் தேடி நெஞ்சுபுண்-
ஆவர் எல்லாம்

யோசிக்கும் வேளையில் பசிதீர உண்-
பதும், உறங்குவதும் ஆகமுடி-
யும் உள்ளதே போதும் நான்,
நான் எனக்குளறியே ஒன்றை-
விட்டு ஒன்றுபற்றிப்

பாசக் கடற்குளே வீழாமல் மனது
அற்ற பரிசுத்த நிலையை

அருள்வாய் பார்க்கும் இடம்
எங்கும் ஒரு நீக்கம் அறநிறை-
கின்ற பரிபூரண ஆனந்தமே.
(பாடல் 13)

## சும்மா இருக்கின்ற சாதனை

ஒருவன் மதயானையை அடக்கலாம். கரடியை, கொடிய புலியை வசப்படுத்தலாம். சிங்கத்தை பயிற்சி கொடுத்து சவாரி செய்யலாம். பாம்பைப் பழக்கலாம். தாமிரத்தைத் தங்கமாக்கலாம். கூடுவிட்டுக் கூடு பாயலாம். நீரில் நடக்கலாம். விண்ணில் பறக்கலாம். இளமையோடு வாழலாம். இன்னும் பற்பல சாதனை செய்தாலும் மனதை அடக்கி சும்மா இருக்க முடியுமா? முடியாது. அதற்கு இடைவிடாப் பயிற்சியே பயன் தரும்.

கந்துக மதிகரியை வசமா நடத்தலாம்,
கரடி வெம்புலி வாயையும் கட்-
டலாம், ஒரு சிங்கம் முதுகின்
மேல் கொள்ளலாம் கண் செவி
எடுத்து ஆட்டலாம்.

வெந்தழலின் இரதம் வைத்து ஐந்து
லோகத்தையும் வேதித்து விற்று
உண்ணலாம். வேறு ஒரு-
வர் காணாமல் உலகத்து உலா-
வலாம். விண்ணவரை ஏவல்
கொள்ளலாம்......... சிந்தையை
அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம் அரிது. (பாடல்118)

## நிறைவுரை :

தாயுமானவ அடிகளின் 1452 பாடல்களும் மிகுந்த பொருள் நயமும், கருத்தாழமும் உடையவை. எல்லா சமயத்தவரும் கற்கும் வகையில பொதுநோக்கில் அமைந்தவை. ஆகவே மெய்யன்பர்கள் அனைவரும் ஸ்ரீதாயுமானவ் அடிகள் பாடல்களைக் கற்று ஆன்மீக உணர்வுகள் பெற்று பல் நலமும் பல்லாண்டும் வாழ பிரார்த்திக்கிறேன்.

"ஒன்றே, பலவே, உருவே, அருவேயோ
என்றே அழைப்பது உன்னை
அன்றோ பராபரமே"
-(பராபரக்கண்ணி 118)

ஸ்ரீதாயுமானவ சுவாமிகள்
திருவடி சரணம்.

❋❋❋❋❋

# எண்களில் '7'ன் அற்புதம்

எண்சாண் உடலுக்கு சிரசே பிரதானம் என்பார்கள். அச்சிரசில் உள்ள அங்கங்களில் 'கண்' மிகவும் பிரதானமானது. கவிகள் சில பெண்களின் கண்களை 'கயல்விழி', 'மான்விழி' என்று வர்ணிப்பார்கள். அவ்விழிகளுக்கு பார்த்தவரை வசீகரம் செய்யும் காந்தசக்தி உண்டு. அதுபோல் '7' என்ற எண் சாஸ்திர விஞ்ஞான ரீதியாகவும், எண்களில் ஆகர்ஷணம் மிக்கதாயும் எண்களின் 'கண்'ணெனவும் பிரகாசிக்கிறது என்பதை கீழ்க்கண்ட விஷயங்கள் ஊர்ஜிதப்படுத்துகின்றன. அதனைச் சிறிது பார்ப்போமாக!

சம்ஸ்க்ருதத்தில் 'சப்த' என்ற சொல்லுக்கு '7' என்று பொருள். சிருஷ்டியின் அற்புதத்தைப் பாருங்கள்.

1) சப்த லோகங்கள்
2) சப்த ரிஷிகள்
3) சப்த கன்னிகைகள்
4) சப்த புரிகள்
5) சப்த சாகரங்கள்
6) சப்த நதிகள்
7) சப்த ஸ்வரங்கள்
8) சப்த நாடிகள்
9) சப்தகிரி (திருமலை)
10) ரத சப்தமி (அன்று ஸ்ரீவேங்கடேசப்பெருமாள் 7 வாகனங்களில் திருவீதி புறப்பாடு கண்டருளுதல்)
11) ஆதித்யனின் ரதத்தில் உள்ள அலைவங்கள - 7
12) சப்தம ஸ்தான சுத்தி (விவாகத்திற்கு முக்கியம்)
13) சப்த ஸர்கக ஸ்ரீமத் வால்மீகி ராமாயண பாராயணம். கோரிய பலனைக் கொடுக்கக்கூடியது.
14) உலக அறபுதங்கள்7
15) கடைச்சங்கப்புலவர்- 7வர்.
16) கடற்படை எண் - 7. (அமெரிக்காவின் பயஙகரமான பலம வாய்ந்த கப்பற்படை 7th FLEET

இன்னும் வாரத்தின் நாட்கள் 7. வானவில்லின் வண்ண ஜாலங்கள் 7 என்று ஆராய்ச்சி செய்துகொண்டே போகலாம். எண் கணக்குப்படி 16 = 1+6=7 என்று வருவதால் இத்துடன் நிறுத்திக்கொண்டு, மற்றவற்றை மேதைகளுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் விட்டுவிடுகிறேன். மேற்கூறியவை யாவும் ஏன் '7' ஆகவே இருக்கவேண்டும் என்பதுதான் கேள்வி ,றி.

இப்போது சொல்லுங்கள் எண்களில் '7' ஓர் அற்புதமாந எண்களின் கண்ணாக, அதிசுபமான எண்ணாக, ஆராய்ச்சிக்கு உரிய காந்த சக்திமிக்க எண்ணாகத் திகழ்கிறதா இல்லையாவென்று!

தொகுத்தவர்: அரசாணபாலை ராமதேசிகன்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.

## நம்மாழ்வார் விளக்கம்

அச்யுத: ப்ரதித: ப்ராண:
ப்ராணதோ வாஸ்வாநுஜ: ।
அபாந்நிதி ரதி ஷ்டாந
மப்ரமத்த: ப்ரதிஷ்டித: ।। 35 ।।

**320. அச்யுத:** பிரமன் சிவன் இவர்களுடனே அவதரித்தும், தனது நிலை (ஐச்வர்யம், மேன்மை) குலையாதவன்.

..........நான்முகனும் சடைமுடி அண்ணலும்,
செம்மையால் அவன் பாதபங்கயம் சிந்தித்து,
ஏத்தித் திரிவரே (3.6.4)

**321. ப்ரதித:** இதனால் உலகமே நிறைந்த புகழ்வாய்ந்தவன்.

ஆர்ந்த புகழ் அச்சுதனை, அமரர் பிரானை
எம்மானை (3-5-11)

**322. ப்ராண:** ஜீவராசிகளுக்கு உயிரானவன்

உலகுக்கே ஓர் உயிருமானாய் (6-9-7)

## 12. கூர்மாவதாரம்

ஆமையாய் திருப்பாற்கடலில் மந்தரமலையை நட்டுத் திரித்து, அமுதத்தை தேவர்களுக்கு வழங்கி அவர்களை அமரர்களாக்கினான்.

**323. ப்ராணத:** கடலைக் கடையும் போது, தேவர்களுக்குக் கடையும் சக்தியை அளித்து, வாழ்வுக்கான அமுதம் வழங்கியவன்.

அமரர்க்கு அருமை ஒழிய ஆரமுது ஊட்டிய அப்பனை

(3-7-5)

[அருமை ஒழிய-கடையும் வருத்தத்தைத் தனதேயாக்கி]

**324. வாஸ்வாநுஜ:** இந்திரனுக்கு இன்பம் அளிக்கத் தம்பியாகப் பிறந்தவன்.

**325. அபாம்நிதி:** கடலைக் கடைந்த போது, பெரிய வடிவுகொண்டு அதற்கு ஆதாரமாக இருந்தவன்.

ஆழ்கடலைக் கடைந்ததுப்பனே!

(4-7-5)

[துப்பன் - மிடுக்குடையவன், கொண்ட பெரிய வடிவத்தால்.]

**326. அதிஷ்டாநம்** - கடலைக் கடைந்த போது, மந்தரமலை நிற்கும்படி தாங்கியவன்.

மலைகொண்டு மத்தா, அரவால் சுழற்றிய
மாயப் பிரான் (தி.விரு. 51)

**327. அப்ரமத்த:** இவ்வாறு தேவர்களைக் காப்பதில் விழிப்புடன் இருப்பவன்; ஊக்கங் குலையாதவன்.

மலக்கம் எய்த மாகடல் தன்னைக் கடைந்தானை

[மலக்கம் எய்து - மிகவும் கலங்குமாறு]

**328. ப்ரதிஷ்டித:** தனக்கு எதுவும் ஆதாரமில்லாமல் தன் மகிமையாலே நிலைநிற்பவன்.

தான் ஓர் உருவே தனிவித்தாய் (1-5-4)

ஸ்கந்த ஸ்கந்ததரோ துர்யோ
வரதோ வாயுவாஹந: ।
வாஸுதேவோ ப்ருஹத்பாநு
ஆதிதேவ: புரந்தர: ।। 36 ।।

**329. ஸ்கந்த:** அஸுரர்களைத் தானே மங்கச் செய்தவன்.

*அமுதம் தேவர் உண்ண, அசுரரை, வீடும்*
*வண்ணங்களே செய்துபோன வித்தகமும்* (5-10-10)

[வீடும் வண்ணங்களே செய்து-தான் கொண்ட பெண் வடிவத்தாலே, இவர்களுக்கு அமுதம் பெறுவதில் ஆசையில்லாமல் செய்து.]

**330. ஸ்கந்ததர:** ஸேநாபதியான ஸகந்தனையும் தாங்குமவன் (ஸேநாபதிகளில் நான் ஸ்கந்தன் என்றான் கண்ணன்.)

*முக்கண் ஈசனோடு தேவு பல நுதலி* (திருவா. 5)

[இந்தத் தேவர்களுள் கந்தன் ஒருவன்.]

**331. துர்ய:** புவனங்களாகிய பாரத்தைத் தாங்குவோன்.

*யாவகை உலகமும் யாவரும் அகப்படக்....*
*கரந்து ஓர் ஆலிலைச் சேர்ந்த எம்பெருமாமாயனை* (திருவா. 7)

**332. வரத:** தேவர்கள் விரும்புவனவற்றை அளிப்பவன்.

*கூடி நீரைக் கடைந்த வாறும், அமுதம்*
*தேவர் உண்ண* (5-10-10) [இந்த அவதாரத்தில்]

**333. வாயுவாஹந:** உலகுக்கு உயிராக ப்ராணவாயு வீசும்படி செய்பவன்.

*நீராய், நிலனாய்த், தீயாய்க், காலாய்* (6-9-1)

[கால்-காற்று, வாயு, இவன் வாயுவுக்கு அந்தராத்மா.]

## 13. பரமாத்மா

பரமாத்மாவின் குணங்கள், இவன் உறையும் ஸ்ரீவைகுண்டம் இவை பற்றி விளக்குவது இப்பகுதி.

### 13.1 கல்யாண குணங்கள்

**334. வாஸுதேவ:** ப்ரபஞ்சம் முழுதும் அடர்ந்து, யாவும் தன்னிடம் இருக்கப்பெற்றவன், இத்தகைய ப்ரபஞ்சத்தில் வஸிப்பவன்.

*......அகலம், கீழ், மேல் அளவிறந்து, நேர்ந்த*
*உருவாய் அருவாகும்* (1-5-10)

[அகலம், கீழ், மேல், பத்து திசைகள், உரு அரு ஆகும் - சேதன அசேதனங்களுக்கு அந்தராத்மாவான்.]

**335. ப்ருஹத்பாநு:** (இந்தத் திருநாமத்தின் விவரம்) எப்போது விரிவாக விளங்கும் ஒளியுடையவன்.

*பர நன்மலர்ச்சோதீயோ* (10-10-10)

**336. ஆதிதேவ:** உலகங்களுக்கு மூல காரணமாகிப் படைப்பு முதலியன செய்து மகிழ்பவன் (விளையாட்டாக).

*இன்புறும் இவ்விளையாட்டுடையானைப் பெற்று* (3-10-7)

**337. புரந்தர:** அசுரமயமான முப்புரங்களை எரித்தவன்.

*புரம் ஒரு மூன்று எரித்து* (1-1-8)

[சிவனுக்கு அந்தர்யாமியாகி, அம்பின்நுனியாகி இலங்கி.]

*அசோகஸ் தாரணஸ் தார:*
*சூர: சௌரிர் ஜநேச்வர: ।*
*அநுகூல: சதாவர்த்தீ:*
*பத்மீ பத்மநிபேக்ஷண: ।। 37 ।।*

**338. அசோக:** துன்பங்களைப் போக்குபவன்; பசி முதலியன சாராமல் காப்பவன்.

*பிணியும் சாரா, பிறவி கெடுத்து ஆளும்* (9-10-9)

[ஆத்மாவைப் பற்றிய துன்பங்கள் சோகம், மோகம், பசி இவை நீங்கும்.]

**339. தாரண:** பகைவர், கள்ளர், நோய் இவற்றிலிருந்து காப்பாற்றுபவன், இவை ஆதிபௌதிகங்கள்.

*பாடு சாரா* (9-10-11)

**340. தார:** ஸம்ஸாரமாகிய கடலினின்றும், நம்மைக் கரையேற்றுவோன்.

விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்
(10-6-3)

**341.** சூர: விரோதிகளை வெல்லும் ஆற்றல் மிக்கவன்; ஜயசீலன.

அசுரரை என்றும் துணிக்கும் வல்லரட்டன்
(10-1-9)

[அரட்டன் - மிடுக்குடையவன்.]

**342.** சௌரி: சூரன் என்ற வஸுதேவரின் திருமகன்.

**343.** ஜநேச்வர: இவ்வாறு பெருமையுள்ள பிறவியுள்ளவர்களுக்கெல்லாம் தலைவன்.

உயிர்கள் எல்லா உலகுமுடையவனை (3-2-11)

**344.** அநுகூல: பரத்வத்தால் மேன்மையைப் பாராட்டாமல் அடியார்க்கு எளியனானவன்.

தமர்கட்கு எளியானை (10-5-1)

**345.** சதாவர்த்த: ஐச்வர்யமாகிய அலைகள் பல பலவாகச் சுழித்துப் பெருகும் மேன்மையுள்ளவன்.

........இன்பத் துன்பக் கழிநேர்மை ஒடியா
இன்பப் பெருமையோன் (8-8-2)

[ஐச்வரயத்தால் இன்பம், இன்பத் துன்பக் கழி நேர்மை - அனுபவிக்கும் இன்பத்தில் துன்பம் என்பது கலவாமல் இன்பமேயாயிருத்தல்; ஒடியா இன்பம் - குறையாத இன்பம்.]

## 13.2 திருமேனி

**346.** பத்மீ: லீலைக்கான தாமரை மலர் எப்போதும் கையில் ஏந்தியவன்.

**347.** பத்மநிபேக்ஷண: காண்போரது தாபம் தீருமாறு கமல மலர் போன்ற கண்கள் உடையவன்.

......தாமரைக் கண்களோடும்......செல்கின்றது
என் நெஞ்சமே (5-5-1)

(தொடரும்)



# கண் இரண்டு பார்வை ஒன்று

திரு. எஸ். துரைசாமி - ஹோசூர்.

'எத்தனையோ தருமங்கள், எத்தனையோ அரசியல சட்டங்கள், எத்தனையோ சமுதாய மாற்றங்கள் நிகழ்ந்திருக்கும் இப் புண்ணிய பூமியில் காலவெள்ளத்தால் கொண்டு செல்லப்படாத, காலத்தால் மாற்றப்படாத, மாறுத, ஆனால் என்றைக்குமே வெள்ளிப்பனிமலைபோல், வற்ருத ஜீவநதிகள் போல் வளமுடன் இருப்பது 'இந்துமதம்' ஒன்றே. அதில் வாரி வழங்கிய ஆன்மீகப் பொக்கிசங்களையும், உன்னதத் தத்துவங்களையும், கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளையும் இதுவரை உலகில் எந்த ஒரு மதமும், அரசியலும், அறமும், எடுத்துரைக்கவில்லையென ஆணித்தரமாக இந்த ஆயுள் முழுமையுமல்ல எத்தனையுகங்களோ அத்தனைக்கும் சொல்லமுடியும். இதுவெறும் புகழ்ச்சியல்ல. சத்தியம்! சத்தியம்! சத்தியம்!'

'மண்ணில் புதைந்திருக்கும் தங்கத்தை வெட்டி எடுத்து, தட்டிப்பொடித்து, கட்டி உருக்கிக் கழுத்திலே மாலையாய், மணிகளாய், முத்துக்களாய், மூக்குத்திகளாய், அட்டிகளாய், ஒட்டிகளாம் ஒய்யாரத் நங்கைகளுக்கு மெய்யாக அணிவித்தாலே, அதன் மதிப்பு, மற்றவர்களுக்குத் தெள்ளத்தெளிவுபடும். அதுபோல் வேதங்களையும், உபநிடதங்களையும் வெட்டி எடுத்து பிழிந்து சாருக்கி இதிகாசங்களாகவும், புராணங்களாகவும் ஆக்கி இறைவனுக்கு அளித்து மகிழ்ந்தனர் ஞானிகள்.'

வேதங்கள், உபநிடதங்கள் இந்து மதத்தின் ஒரு கண்ணுயிற்று;

இதிகாசங்களும், புராணங்களும் இந்துமதத்தின் மற்ரெரு கணணுயிற்று;

இறைவன் படைப்பிலே எந்த உயிர்க்கும் கண் இரண்டு இருப்பினும் - பார்வை ஒன்ருகவே யிருப்பது எவ்வளவு உண்மையோ; அதுபோல் நமது மதத்திற்கும் கண் இரண்டாயினும், பார்வை ஒன்ருயிறறு.

ஆத்ம வித்தையிலும் அன்பர்களுக்கு கீதை ஒரு கண்ணுயிற்று - பாரதம் மற்ரெரு கண்ணுயிற்று - எனின் பார்க்கும் நோக்கும், விளக்கும் பொருள் ஒன்றே! ஆம்! அதுவே நாம் காணும் விந்தை.

"தேகமெடுத்துள்ளவன் சத்துவ குணம் ஓங்கியிருக்கும் போது மரணமடைவானாயின் ஞானவான்களுடைய நல்லுலகங்களை அடைவான். ராஜோ குணத்தில் காலமாகிறவன் கர்மப்பற்றுடையவர்களுக்கிடையிலே பிறக்கிருன். அவ்வாறே தாமஸ குணத்தை அடைந்தவன் இறக்கும் போது அறிவிலிகள் கர்ப்பத்தில் பிறக்கிருன்.

உடலை விடும் போது உள்ளத்தில் என்ன எண்ணம் நிலைத்திருக்கிறதோ, அதற்கு ஏற்ப மறுபிறப்பு அமைகிறது"

இவ்வாறு முன்பு கீதையின் நாயகன் இப்போது கீதையின் நாயகன் கண்ணன் அர்ச்சுனனுக்கு பிறவி உண்டாவதற்குரிய காரணத்தைத் தெளிவாக, குன்றின் மேலிட்ட விளக்கு போல் விடையளிக்கிருன். இது கீதையின் தத்துவமாயிற்று.

இதையே வேதமாமுனி வியாசர் கதையாக வடித்தார். ஏனெனில் நோயால் அவதியுறும் குழந்தைக்கு, கசப்பான மருந்து கொடுக்கவேண்டும். ஆனால் அவள், குழந்தை மருநதை கசப்பென்று தெரியா வண்ணம் உண்ண நினைததாள. அவள் பாசத்தோடு விவேகமும் அறிந்தவள். மருந்தை தேனில் குழைத்து அன்புடன் அணைத்து அமுதுபோல் ஊட்டிவிடுகிருள். கசப்பே தெரியாத குழந்தையும் அதை இனிப்பென நினைத்து மகிழ்வுடன் ஏற்றது. நொடிப்பொழுதில் நோயும் பறந்தது.

அதுபோல், எதிர்காலத்தில் வரும் இளைய சமுதாயம் எளிதில் தத்துவங்களை சிரமமின்றிப் புரிந்து தெரிந்து தெளிந்து வாழ்க்கையை அமைத்துக்கொண்டு இனிதுவாழ தத்துவங்களைச் சாருகப் பிழிந்து கதையெனும் தேனுடன் கலந்தார்.

இவ்வாறே கதைகள் காவியமாக மாறியது, புராணங்களாக பிறந்தன. இதிகாசங்களாக உருவெடுத்தன.

இங்கு பஞ்சம வேதமாகிய பாரதம் மிகவும் அருமையான, எளிமையான, உன்னதமான முறையில் த

துவமுத்துக்களைக் கதையாகத் தன்னுள் கருக்கொண்டுள்ளதைக் காண்போம்.

பாண்டவர்களின் மூதாதையர்களில் விசித்திர வீரியன் ஒருவன். அவன் பீஷ்மருக்குத் தம்பியாக வந்து பிறந்தான். இளமைக்காலம் இனிது முடிந்து வாலிபம் அரும்பியது. மணம் முடிக்க மாமன்னர் பீஷ்மர் திருவுள்ளம் புனைந்தார்.

காசிநாட்டு மன்னனுக்கு அம்பை, அம்பிகை, அம்பாலிகை என மூன்று புதல்வியர் இருந்தார்கள். அவர்களுக்கு சுயம்வரம் நடத்த ஏற்பாடு நடந்தது. செய்தி அறிந்த பீஷ்மர் தம்பிக்கு அவர்களை மணம் முடிக்க சுயம்வரம் சென்றார்.

பீஷ்மர் வந்திருப்பதைப் பார்த்த அனைவரும் ஒருவாறு பார்த்தனர். பெரும் பணக்காரர்கள் இருக்கும் அவைக்கு, பரம ஏழை சென்றால் எவ்வாறே, கல்வியே இல்லாத மூடன், அறிஞர்கள் சபைக்குள் சென்றால் எவ்வாறே - அங்கு மக்களின் மனநிலை இருக்குமோ அவ்வாறு இருந்தனர் இளவரசர்கள். ஏனெனில், நேற்றுவரைதான் இளமையில் பூண்ட சத்திய விரதமாகி, பிரம்மச்சரியாக இருந்தவர் இன்று இங்கு வந்திருப்பதன் காரணம்? என்னவோ? என நகைத்தனர். உடல் இளைக்க உரோமம் வெளுக்க இவருக்கு இப்போது பெண்ணாசையா? என வியந்தனர்.

பதுங்கி வாழும் முயலை முடுக்கிவிட்டு, பின்பு தடியெடுத்துப் புறப்பட்டவன் முயலைப் பிடித்தது இல்லை; படமெடுக்கும் நாகப்பாம்புக்கு பால்கொடுத்துப் பிடித்தவனும் இல்லை; சீறிவரும் வேங்கையை சினந்து தாக்கி வென்றவனும் இதுவரை இல்லை; இதுவே நாம் கண்ட சரித்திரம். இக்கதையே இங்கு நடந்தது. 'இராக்கத' மணம் புரிய நினைத்த பீஷ்மர் பெண்கள் மூவரையும் தேரில் ஏற்றிப் புறப்பட்டார். 'திணவெடுத்தவர்கள் திறமையைக் காட்டுங்கள், ஆற்றலுள்ளவர்கள் அணையிடுங்கள்' என சிங்கநாதம் புரிந்து புறப்பட்டார் அஸ்தினாபுரம் நோக்கி.

பகைவனுக்கு மற்றொரு பகைவன் நண்பனாகி, எதிரியை முறியடிப்பது போல், ஏமாந்தவர் ஒன்று கூடினர், ஒருசேர போரிட்டனர். 'தோல்வியை' மணமுடிந்து நாடு திரும்பினர்.

அவர்களுள் சால்வநாட்டு மன்னன் சால்வன் மட்டும் இறுதிவரை உறுதி குன்றாமல் போரிட்டான், அம்பை மீதுள்ள காதலினால். அவனும் இறுதியில் 'அம்பை'யை மீட்கமுடியாமல், பீஷ்மர் 'அம்பு'டன் நாடு திரும்பினான், ஏமாற்றமடைந்து.

பிறகு பீஷ்மர் மூவரையும் விசித்திர வீரியனுக்குத் திருமணம் செய்து வைக்க ஏற்பாடு செய்தார்.

மூவரில் மூத்தவளான அம்பை, பீஷ்மரை நோக்கி "உலகமே எதிர்ப்பினும் எதிர்த்து வெற்றி கொள்ளும் வேந்தே, தனுர் வேதத்தில் கரை கண்ட செம்மலே, அறம் பல தெரிந்த வீரரே, நான் சால்வ மன்னரை மணமாற விரும்புகிறேன்" என்று தன் எண்ணத்தை வெளிப்படுத்தினாள்.

அறம் தெரிந்த ஞானியான பீஷ்மர், "விரும்பியவர் விரும்பியதையே அடைய வேண்டும். இதில் எள்ளளவும் குறுக்கிட மாட்டேன். ஆகவே அம்பையே நீ சால்வ மன்னனையே மணந்து சுகமாக வாழ்வாயாக" என ஆசி கூறி வழி அனுப்பினார்.

தன் தோழிகளுடன் அம்பை சால்வனை அடைந்தாள். ஆனால் அம்மன்னன் "அம்பையே, பலர் பார்த்திருக்க, உன்னை பீஷ்மர் கவர்ந்து சென்றார். அவருடன் போரிட்ட நானும் தோல்வியை தழுவியிருக்க உன்னை நான் மணந்தால் உலகம் என்னை இகழும். அது தருமமும் நேர்மையுமல்ல. பூவாக இருந்தால் ஒருவர் தொடுக்க இன்னொருவர் சூடலாம். ஆனால் நீ பூவையாயிற்றே! எடுத்துச் சென்றவரே ஏற்றுக்கொள்வதுதான் முறை" என்று திருப்பி அனுப்பினான் சால்வன்.

அம்பை மனம் நெகிழ்ந்து உளம் உருகி செய்வதறியாது பீஷ்மரிடம் வந்து நடந்ததைக் கூறினாள். பீஷ்மர் "பெண்ணே, நான் சாகும்வரை பிரம்மச்சாரியாக வாழ சத்தியம் செய்தவன். இது உலகறிந்தவிஷயம், ஆகவே என்னால் உன்னை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும். ஆகவே நீ விசித்திர வீரியனிடம் சென்று அவனையே ஏற்றுக்கொள்" எனக்கூறி அனுப்பினார்.

அம்பை விசித்திர வீரியனிடம் சென்றாள். இருவரை ஏற்றுக்கொண்ட நீர் என்னையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் எனப்பணிந்தாள். ஆனால் மன்னனோ "பெண்ணே உள்ளத்தால் ஒருவரை நேசித்து, உடலால் ஒருவரை மணப்பது கொடிய குற்றம். அதுவும் பெண்பாவம் பொல்லாதது, நீ சால்வனையே மணந்துவாழ்" என மறுத்தான்.

"ஆடுகளத்தில் இருமருங்கும் அடிபட்டு, மிதிபட்டு, இடிபட்டு அங்குமிங்கும் ஓடும் பந்தின் நிலை" அடைந்தனள் அம்பை. பலமுறை இருவரையும் சந்தித்துப் பலனளிக்காமல் போகவே, உளம் நொந்தாள். உடல் மெலிந்தாள். அழகின் வனப்பும், இளமையின் ஏக்கமும் அவளை வாட்டியது. அம்பு எய்தவன் ஒருபுறமிருக்க, அம்புதனை ஏன் நோகவேண்டும்? என அம்பை சிந்தித்தாள். "இருவரும் கைவிட்டனர். நீங்களே என்னை சேர வேண்டும் இல்லையேல் உயிர் துறப்பேன்?" என பீஷ்மரிடம் கூறி அழுதாள்; புரண்டாள்; கதறினாள்; கலங்கினாள்.

"தாளிட்ட கதவுகளை வெளியே தட்டினால் உள்ளே இருப்பவர் கதவுகளைத் திறப்பர்; ஆனால் பூட்டிய கதவுகளை யாரேனும் தட்டுவாருண்டோ?" உலகில்.

பூட்டிய கதவானது பீஷ்மர் உள்ளம்; தட்டிய கரங்கள் சலித்தது; தட்டும் ஓசை கேட்டார் பீஷ்மர்; ஆனால் ஆசை பிறக்கவில்லை அவர் மனதில். மறுத்துவிட்டார் மன்னர்! பொறுமையிழந்தனள்; புயலாக மாறினாள்! சீறி எழுந்தனள்; சினம் கொண்டனள்! வஞ்சம் தீர்க்க வஞ்சி நினைத்தனள்! வனம் புகுந்தனள்; கடும் தவம் நோற்ருள். முருகனுக்குக் கருணை பிறந்தது; காட்சி தந்தார். வஞ்சிக்கு வரமும் தந்தார்.

"மாலையொன்றைக் கொடுத்து இதை யார் அணிந்து பீஷ்மருடன் போர் புரிகிருர்களோ, அவர்களால் பீஷ்மருக்கு மரணம் நேரும்" என விடை கொடுத்தனுப்பினார்.

வெற்றி கிடைத்தது; வீழ்வார் பீஷ்மர் என துள்ளி எழுந்தாள். தரணி முழுவதும் அலைந்தாள். தார்வேந்தர், வில்வேந்தர, போர்வேநதர அனைவரையும அண்டி அடிபணிநது. முருகப்பெருமானின் மாலையை அணிந்து முதியவர பீஷ்மரை கொல்ல அனைவரையும் கேட்டுககொண்டாள். ஆனால் எல்லோரும் சொல்வேந்தர் ஆயினரே அன்றி செயல் வேந்தர் ஆயினர் அல்லர்.

காலம் உருண்டது; கன்னி மனம் நொநதது; தீயிலிட்ட புழுவானாள்; துடித்தாள், அம்பையே ஒரு முடிவுக்கு வந்தாள். இப்பிறவியில் என் சபதம் நிறைவேருது; ஆகவே மறுபிறவியெடுத்து பீஷமரைக் கொல்ல சபதமிட்டு மாலையை துருபதன் மாளிகை வாசலில் தொஙக விட்டு, அக்கினி குண்டத்தில் விழுந்து மாய்ந்தனள்.

மறுபிறவி ஏற்பட்டது. துருபத மகாராஜனுக்கே மகளாகப் பிறந்தாள்; துருபதன் மகளுக்கு 'சிகண்டி' என்று பெயர் சூட்டி வளர்த்தான். ஒருநாள் சிகண்டி அரண்மனை வாயிலில் தொங்கிய முருகனின் வரப்பிரசாத மாலையை கழுத்தில் அணிந்து கொண்டாள். செய்தியறிந்த மன்னன் பீஷ்மருக்கு எதிரியாகிவிட நேர்ந்ததே என அஞ்சி அவளைக் காட்டிற்கு அனுப்பி விட்டான். கானகம் சென்றவள் சீஷியர் என்ற முனிவரை அண்டிப் பணிவிடை புரிந்தனள். பணிவிடையில் அகம் மகிழ்ந்த சீஷியர் அவளுக்கு வரம் கொடுத்தார். "கங்கை நதிக்கு வரும் கந்தர்வர்களில் ஒருவன் உன் பெண் உருவை எடுத்துக் கொண்டு அவன் ஆண் உருவை உனக்குக் கொடுப்பான். பின்னர் உன்னால் பீஷ்மருக்கு மரணம் நேரும்" என மொழிந்தார்.

சிகண்டி பாஞ்சால நாடு திரும்பினான். நடந்ததை துருபதனுக்கு தெளிவாக் எடுத்துரைததான். 'தந்தையே கவலையை விடுங்கள். இனி நான் பீஷ்மரைக் கொல்வேன்' என மனதினிக்க மதுரமொழி பேசினான்.

அதுமுதல் சிகண்டி மாபெரும் வீரனான். அவன் கடைசியில் குருசேத்திரப்போரில் பீஷ்மரை எதிர்த்து நின்ருன். பத்தாம் நாள் போரில் அர்ச்சுனன் சிகண்டியை முன்னே நிறுத்தி போர் செய்யத் தொடங்கினான்.

பீஷ்மர் ஆயுதம் இல்லாதவனுடனும், புறமுதுகு காட்டுபவனிடமும், ஆணில்லாத பெண்ணுடனும் போர்புரியமாட்டேன் என்ற சபதப்படி போர் செய்பவர். ஆகவே அவர் சிகண்டியை பெண் என நினைத்து பேதையுடன் போர் புரிய மனமின்றி ஆயுதமின்றி நிற்கும் போது அவரைத்தாக்கி கீழே விழச்செய்தான் அர்ச்சுனன்.

பின்பு அவர் உத்தராயண காலம் வரை உயிருடன் அம்புப் படுக்கை மீதிருந்து பின் சொர்க்கம் சேர்ந்தார்.

"உடலை விடும்போது உள்ளத்தில் என்ன எண்ணம் நிலைத்திருக்கிறதோ அதற்கு ஏற்ப மறுபிறப்பு அமைகிறது" என்ற அரிய தத்துவத்தை சிகண்டியின் வாழ்க்கையில் தெள்ளத்தெளிவாக விளக்குகிருர் வியாசர்.

ஆகவேதான், நமது மதம் வாழ்க்கையை நான்கு கட்டங்களாகப் பிரித்தன. அவையே பிரம்மச்சர்யம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்பது.

சொந்தங்கள், பந்தங்கள், பற்றுக்கள், சொத்து, சுகம், குடும்

பம், மனைவி, மக்கள், சமுதாயம் இப்படி சங்கிலித் தொடர்பிலே விலங்கு பூட்டிய மனித மனங்களுக்குப் பயிற்சி கொடுக்கவே சன்னியாசம் தோன்றியது. செய்த பாவங்களைத் தவறுகளை யெல்லாம் விலக்கி வைத்து, அழியாப்பரம்பொருள் மீது அசையா எண்ணத்தை நிலைநிறுத்தவே அது நமக்கு வழிகாட்டுகிறது. 'எண்ணங்களை உருவாக்குவது மனமே' என்பதால் அதை முதலில் மாற்றப்பயிற்சி கொடு என்கிறார் பட்டினத்தார்.

நினைமின் மனனே! நினைமின்
மனனே!
உலகப்பொய் வாழ்க்கையை
உடலை ஓம்பற்க;
பிறந்தன இறக்கும், இறந்தன
பிறக்கும்;
தோன்றின மறையும், மறைந்தன
தோன்றும்;
பெருத்தன சிறுக்கும்; சிறுத்தன
பெருக்கும்;
உணர்ந்தன மறக்கும், மறந்தன
உணரும்;
புணர்ந்தன பிரியும், பிரிந்தன
புணரும்;
அருந்தின மலமாம், புனைந்தன
அழுக்காம்;
உவப்பன வெறுப்பாம், வெறுப்பன
உவப்பாம்;
என்றிவை அனைத்தும் உணர்ந்தனை
அன்றியும்
பிறந்தன பிறந்தன பிறவிகள்
தோறும்
கொன்றனை அனைத்தும், அனைத்து
நினைக் கொன்றன;
தின்றனை அனைத்தும் அனைத்து
நினைப் பெற்றன;
ஓம்பினை அனைத்தும், அனைத்து
நினை ஓம்பின;
செல்வத்துக் களித்தனை,
தரித்திரத்து அழுங்கினை;
சுவர்க்கத்து இருந்தனை, நரகில்
கிடந்தனை,
இன்பமும், துன்பமும் இருநிலத்து
அருந்தினை; இதனுள்
பீளையும் நீரும் புறப்படும்
ஒரு பொறி
மீளும் குறும்பி வெளிப்படும்
ஒரு பொறி;
சளியும் நீரும் தவழும்
ஒரு பொறி;
உமிழ்நீர் கோழை ஒழுகும்
ஒரு பொறி;
வளியும் மலரும் வழங்கும்
ஒரு வழி;
சலமும் சீயும் சரியும்
ஒரு வழி;
உள்ளுறத் தொடங்கி
வெளிப்பட நாறும்
சட்டகம் முடிவில் சுட்டெலும்பாகும்
உடலுறு வாழ்க்கையை
உள்ளுறத் தேர்ந்து
வழிவரும் சிவபெரும் போக
இன்பத்தை
திருச் சிற்றம்பலத்து ஒளிருஞ்
சிவனை,
நினைமின் மனனே! நினைமின்
மனனே!

என்று கற்றுக்கொடுக்க விழைகிறார்.

வியாசரும் சரி; கண்ணனும் சரி; பாரதமும் சரி; கீதையும் சரி; நமது மதமும் சரி; ஞானி பட்டினத்தாரும் சரி; இரு கண்களாகத் தோற்றமளிக்கினும், இரண்டுமே பார்க்கும் பார்வை யொன்றே! இதைத் தெரிந்து தெளி! புரிந்து வாழ்!

XXXXXXXXX

# விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசீயமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம்.ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத்தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத்தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.





# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

**(FREE HOME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503

**"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"**

**வணக்கம்**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர் - பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 15 வருடங்களாக அளித்து வரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 75 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி, அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறார்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருததுவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணிக்க உத்தேசித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வையற்ற குழைந்தைகளுக்கு தினந்தோறு மூன்று வேளையும் தொடர்நது அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அனபர்கள் வருடத்தில் ஏதேனும் ஒரு நாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில) நவஜீவன ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின அருளைப் பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் ஸ்ரீ ஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபாம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைகப்படும் டொனேஷனுக்கு வருமான வரிசலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G) vide Hqrs. No. 1 (118) VJA/95-96. Valid upto 31-3-98.

ஆஸ்தீக அன்பர்கள் தஙகளது டொனேஷனை by CH/DD/MO மூலம NAVAJEEVAN BLIND RELIEF CENTRE, என்கிற பெயரில மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுபப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்" ஸ்வாமி விவேகானந்தர்.

நாராயண ஸேவையில்
T.S. ஆசார்யா
Founder / President.

நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

# பகவத் கீதை

பதினோராவது அத்தியாயம்

## விஸ்வரூபதர்சன யோகம்

உமைப்ரியன்



### அர்ச்சுனன் சொன்னது

மதநுக்ரஹாய பரமம்
குஹ்ய மத்யாத்மஸம்ஜிதம் ।
யத்வயோக்தம் வசஸ்தேன
மோஹோஅயம்
விகதோ மம ।। (1)

"என்னை உய்விப்பதற்காக உங்களால் கூறப்பட்ட மிகச்சிறந்ததும், இரகசியமானதும், ஆன்மீகக் கருத்துக்கள் பற்றியதுமான விளக்கங்கள் என்னுடைய மனமயக்கத்தை அகற்றிவிட்டன."

[இந்த ஸ்லோகத்தின் மூலம் முலப்பரம்பொருளான கிருஷ்ணனின் இறைத் தத்துவத்தைத் தான் தெரிந்துகொண்டதை அர்ச்சுனன் பிரகடனப்படுத்துகின்றான். தான், இந்த உலகம், இரண்டிற்கும் உள்ள உறவு ஆகியவற்றை அறிந்த அர்ச்சுனன் தன்னை கிருஷ்ணனின் நண்பன் என்ற நட்புறவிலிருந்து விலகி, பக்தன் என்ற நிலையில் தன்னிலை விளக்கம் தருகின்றான்.]

பவாப்யயௌ ஹிபூதானாம் ச்ருதௌ
விஸ்தரசோ மயா ।
த்வத்த: கமலபத்ராக்ஷ
மாஹாத்ம்யமபி சாவ்யயம் ।। (2)

"தாமரைக் கண்ணா! இந்த உயிர்களின் பிறப்பு, இறப்பு ஆகியவற்றை பற்றி உன்னால் இப்போது மிக விளக்கமாக கேட்கப்பட்டேன். உன்னுடைய இறுதி ஆற்றலும் என்னால் கேட்கப்பட்டது."

[எங்கும் எதிலும் கிருஷ்ணர் தான் இருப்பதாகக் கூறினாலும், அவற்றுடன் அவ்விறைவன் பந்தப்படவில்லை. அதனால் அவர்தம் ஆற்றலுக்கு சிறிதளவுகூட தோய்வு என்பது இல்லை. இறைவன் தன் ஆற்றலின் தன்மையை ஒரு சிறிதே கூறினாலும், அதுவே பெரு விளக்கமாக அர்ச்சுனனுக்கு அமைகின்றது. இதுவே இறைவனின் பேராற்றலைக் குறிப்பாக உணர்த்தும்.]

ஏவமேதத்யதாத்த த்வமாத்மானம்
பரமேச்வர ।
த்ருஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம்
புருஷோத்தம ।। (3)

"பரம்பொருளே! தாங்கள் தங்களைப் பற்றிக் கூறியனயாவும் உண்மையே. (ஆகவே) புருஷோத்

தமா, உம்முடைய ஈசுவர உரு வத்தை (நான்) காண ஆசைப் படுகிறேன்."

[இங்கு அர்ச்சுனன் மற்றைய பக்தர்களை மனதிற்கொண்டு ஒரு வேண்டுகோளை இறைவ னிடம் வைக்கின்றான். எங்கும் எதிலும் இருப்பதாகக் கூறிக் கொள்ளும் இறைவன், அவற்றி னின்று தனித்தும் இருப்பதாகக் கூறுவதால், அவ்வாறு தனித்தி ருப்பது எவ்வாறு, அதனை மற்றவர்களால் எப்படிக் காண முடியும் என்ற ஒரு பொது ஐயத்தை மனதிற்கொண்டு, இறைவனின் 'விஸ்வரூப' தரிச னத்தைப் பெற விழைகின்றான் அர்ச்சுனன். மேலும் எண் குணத்தானாகிய விஷ்ணுவின் பேராற்றலைத் தன் ஊனக் கண் ணாலும் கண்டு இன்புறவேண் டும் என்பதும் அர்ச்சுனனின் ஆசை. அதனை நிறைவேற்றிக் கொள்ளவே தன் வேண்டுதலை வெளியிடுகின்றான்.]

மன்யஸே யதி தச்சக்யம் மயா
த்ரஷ்டுமிதி ப்ரபோ ।
யோகேச்வர ததோ மே த்வம்
தர்சயாத்மான மவ்யயம் ।। (4)

"இறைவனே! அதைப் (விஸ்வ ரூபம்) பார்க்க என்னால் முடி யும் என்று (நீங்கள்) கருதுவீர் களேயானால், யோகேஸ்வரனே! உங்களுடைய குறைவற்ற திரு வுருவத்தை எனக்குக் காட்டிய ருள்க."

[இறைவனின் ஆற்றலில் ஒரு சிறுதுளி மட்டுமே, அதுவும் அவ் இறைவன் விளக்கியதால் மட்டுமே அர்ச்சுனனால் அறிந் துகொள்ள முடிந்தது. ஆகவே இறைவனின் முழு ஆற்றலை அவ் இறைவனே கூறினா லொழிய, சாதாரண மனிதனால் அவ் இறைவனை முழுமையாக காணவோ, கேட்கவோ முடி யாது. இங்கு இறைவனின் கரு ணையினால் மட்டும் இது சாத் தியமாகும். அர்ச்சுனன் இங்கு முழுமையாக இறைவனிடம் சர ணடைகின்றான்.]

### பகவான் கூறுவது

பச்ய மே பார்த்த ரூபாணி
சதசோ அத ஸஹஸ்ரச: ।
நானாவிதானி திவ்யானி
நானாவர்ணாக்ருதீனி ச ।। (5)

"பல வகையான, பல வண்ணங் களும், உருவங்களும் கொண்ட எனது தெய்வீகமான உருவங் களை எண்ணற்றலைகளாக இப் போது காண்பாயாக, பார்த்தா!"

[இறைவன் ஒருவனே எங்கும் எதிலும், எப்போதும் இருப்ப தால், இவ்வுலக உயிர்களாக பல உருவங்களில், பல நிறங் களில் மறைந்து விளங்குகின் றான். ஆகவே அவையாவும் இறைக்குணங்கள் நிரம்பப்பெற் றவையாகவே விளங்கிடும். இந் தக் குணரூபங்களைக் காண, ஒரு பக்தன் கேட்டுக்கொண்ட தன் பேரில் இறைவன் தன் னைக் காட்டிக்கொள்ள முன் வருகின்றான்.]

பச்யாதித்யான் வஸூன் ருத்ரானச்-
வினௌ மருதஸ்ததா ।
பஹூன்யத்ருஷ்ட பூர்வாணி
பச்யாஸ்சர்யாணி பாரத ।। (6)

"பார்த்த! (பரத வம்சத்தில் பிறந்தவனே) ஆதித்யர்களையும் வசுக்களையும், ருத்திரர்களை யும், அச்வினிகளையும் மற் றும் மருத்துக்களையும் இப் போது பார்! முன்பு நீ எங்கும் கண்டிராத அதிசயங்கள் பலவற் றையும் காண்பாயாக."

[12 ஆதித்யர்கள், 8 வசுக்கள், 11 ருத்திரர்கள், 2 அச்வினிகள், 4 மருத்துக்கள் ஆகியோரைக் கொண்டு விளங்கும் தன் உரு வத்தை முன்முதலாக அர்ச்சு னனுக்குக் காட்டுகிறார். முன்பு கண்ணன கூறியதை இப்போது தன் கண்ணால் கண்டு அர்ச்சு னன் வியப்படைகின்றான்.]

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம்
பச்யாத்ய ஸ சராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சான்
யத்த்ரஷ்டுமிச்சஸி ।। (7)

"குடாகேச! (அர்ச்சுனா) அசை யும் மற்றும் அசையாப் பொருள் கள் எல்லாம் அடங்கிய இந்த உலகம் அனைத்தையும் என்னு டைய இந்த ஓர் உடம்பிலே காண்பாயாக! மேலும் என் னவெல்லாம் நீ காண விரும்பு கிறாயோ அவையனைத்தையும் இப்போது காண்பாயாக!"

[அர்ச்சுனன் எது நல்லது, எது கெட்டது, இப்போரி னால் ஏற்படும் விளைவுகள் என்னவாக அமையுமோ என்று பலவாறான சந்தேகங் களை கொண்டு விளங்குகி றான். அதனை இப்போது அறிந்துகொள்ளும் வாய்ப்பாக, அர்ச்சுனனுக்கு இறைவன் தன் னைக் காட்டிக்கொள்ள விரும் புகின்றார்.]

நது மாம் சக்யஸே த்ரஷ்டுமனேனைவ
ஸ்வசக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே
மே யோகமைச்வரம் ।। (8)

"ஆனால் என்னை உன்னால் இந்த ஊனக்கணணால் (சாதா ரண பார்வையினால்) காண முடியாது. உனக்கு நான் ஞானக்கண் அருள்கிறேன். (அத் னைக் கொண்டு) என்னுடைய ஆற்றல்மிக்க தெய்வீக மகிமை களைக் காண்பாயாக."

[மனிதனால் ஓர் அளவு தூரத்திலுள்ள பொருள்களை மட்டுமே கண்களால் காணமுடியும். வெகு தூரத்திலிருக்கும் பொருள்களைக் காண அதற்குரிய கண்ணாடி பொருந்திய கருவிகளையே அவன் பயன்படுத்த வேண்டும். அதேபோன்று, கண்ணுக்குத் தெரியாத பொருள்களைக் காண பூதக் கண்ணாடி போன்றவையே அவனுக்குத் துணை செய்யும். அப்படி இருக்கும்போது சிந்தனைக்கும், கற்பனைக்கும் எட்டாத ஆற்றல்களை உடைய இறைவனது திருவுருவத்தை சாதாரண கண் கொண்டோ, பேரறிவு கொண்டோ காணமுடியாது. இறைவனின் திருவருள் எனும் கருணைமிக்க பரிவால் தான், அதனால் கிடைக்கப்பெறும் தெளிந்த ஞான அறிவால் தான், அதனால் பெறப்படும் ஞானக் கண்கொண்டு மட்டுமே அவனுடைய விஸ்வரூப தரிசனத்தைப் பார்த்திட முடியும்.]

ஸஞ்ஜயன் கூறுவது

*ஏவமுக்த்வா ததோ ராஜன்*
*மஹாயோகேச்வரோ ஹரி: ।*
*தர்சயாமாஸ பார்த்தாய பரமம்*
*ரூபமைச்வரம் ।। (9)*

"அரசே பெரும் யோக புருஷனான ஹரியானவர் இவ்வாறு கூறியபிறகு பார்த்தனுக்குத் தன் மேன்மைமிகு ஈஸ்வர உருவத்தைக் காட்டியருளினார்."

[ஸஞ்ஜயன் தன்னுடைய, வியாஸ பகவானால் அளிக்கப்பட்ட ஞானக்கண்ணினால், குருக்ஷேத்ர போர்க்கள நிகழ்ச்சிகளை கண்ணில்லாத திருதராஷ்ட்ரனுக்கு அப்போதைக்கப் போதே கூறிடும் ஆற்றல் பெற்றிருந்ததை 'பகவத் கீதை' ஆரம்பத்திலேயே கூறப்பட்டுள்ளது.]

*அநேக வக்த்ரநயனநேகாத்புத*
*தர்சனம் ।*
*அநேக திவ்யாபரணம்*
*திவ்யாநேகோத்யதாயுதம் ।। (10)*

"அந்த உருவமானது பல்வேறு முகங்கள், கண்கள் கொண்டது. பல அதிசயமான காட்சிகள் கொண்டு விளங்குவது. தெய்வீகமான ஆபரணங்கள் பூண்டது. தெய்வீகமான பலவகையான போர்க்கருவிகளை ஏந்தியுள்ளது."

[ஆதியும் அந்தமும் இல்லாது விளங்கிடும், எங்கும் எதிலும் திகழ்ந்திடும், ஆற்றலும், சிறப்பும் கொண்ட இறைவன் அதற்கேற்றவாறு கற்பனைக் கெட்டாத, சிந்தனைக்கு விருந்தாகத் தன்னை வெளிக்காட்டினான். அதுவே பார்ப்போர்க்கு அதிசயமும், திகைப்பும் ஏற்படுத்திவிடுகிறது. அவன் உடலே தெய்வீக ஒளியுடன் திகழ்ந்திடும்போது அந்த உடலை அணிசெய்யும் ஆபரணங்களும், தெய்வகாரியம் சிறப்புற நடைபெற துணை செய்திடும் ஆயுதங்களும் அவன் சிறப்பை மேலும் விளக்கவே செய்கின்றன.]

*திவ்யமால்யாம் பரதரம்*
*திவ்யகந்தாநு லேபனம் ।*
*ஸர்வாஸ்சர்யமயம் தேவம்*
*அனந்தம் விச்வதோ முகம் ।। (11)*

"அவ்வுருவமானது புனிதமான மாலைகள், ஆடைகள் தாங்கியது. தெய்வமணம் கமழும் வாசனைகளால் பூசப்பட்டுள்ளது. பெரிய அளவில் வியப்பூட்டுது, பிரகாசித்துக்கொண்டிருப்பது, முடிவற்றதாக விளங்கி எங்கும் பரந்துள்ள முகத்தை கொண்டது."

[இயற்கை கொண்டுள்ள கற்பனைக்கும் மிஞ்சிய அதிசய குணங்களை இறைவன் தாங்கியிருப்பதை இந்த 'விஸ்வரூபம்' சுட்டிக்காட்டுகிறது. இவையாவும் இயற்கைவழி இறைவனின் மகிமையினையே படம் பிடித்துக்காட்டுகின்றது.]

*திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய*
*பவேத்யுக பதுத்திதா ।*
*யதிபா: ஸத்ருசீ ஸா ஸ்யாத்-*
*பாஸஸ்தஸ்ய மஹாத்மன: ।। (12)*

"ஆகாயத்தில் ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர்கள் தோன்றினால், அதுபோது ஏற்படும் பேரொளிக்கு நிகராக இவ்வுருவம் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது."

[இங்குச் சாதாரண மனிதனுக்குத் தெரிய வேண்டுமென்பதற்காக, உடனடியாக புரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக ஆயிரம் சூரியன்கள் என்று கூறப்பட்டுள்ளது. ஒரு சூரியனை நேருக்கு நேராக பார்ப்பதே கடினம். அதுபோது, ஆயிரம் சூர்யன்கள் என்றால் கேட்கவா வேண்டும். ஆனால் இறைவனின் பேரொளி இவற்றையெல்லாம் தாண்டிய ஒப்பில்லாத ஒளிபொருந்தியவன் என்பதே பேருண்மையாகும்.]

(தொடரும்)



# கோயில்களில் இதிகாசச் சொற்பொழிவுகள்

திருமதி. சீ. வசந்தி - தரமணி.

உலக நாடுகள் அனைத்திலும் கால வெள்ளத்தில் அழியாத பல காவியங்கள் இன்றும் மக்கள் மனதில் நீங்காத இடம் பெற்றுள்ளன. அத்தகையவற்றில் இந்தியாவில் இந்திய மக்களின் நாடி நரம்புகளில் ஊடுருவி நிற்பவை இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்கள் ஆகும். பாரத நாட்டின் அனைத்து மூலை முடுக்குகளிலும் இக்கதைகள் எதிரொலித்துக் கொண்டேயிருக்கின்றன. பாரத மக்களின் இரண்டு கண்களான இவ்விதிகாசங்களை பண்டைய தமிழரும் போற்றியுள்ளனர். இதற்குச் சான்றாகத் திகழ்பவை கல்வெட்டுக்களும், சிற்பங்களும், ஓவியங்களும் ஆகும்.

பண்டையத் தமிழகத்தில், இக்காவியங்களைப் பொதுமக்கள் படிப்பதற்கும், கேட்பதற்கும் பல தானங்கள் அளிக்கப்பட்டது என்ற செய்தி, தமிழகத்தில் உள்ள கல்வெட்டுக்களால் புலனாகிறது. இவற்றில் காணப்படும் கதைச் செய்திகளும, நிகழ்ச்சிகளும் கோயில்களில் சிற்பங்களாகவும் ஓவியங்களாகவும், தேர், வாயிற்கதவு ஆகியவற்றில் செதுக்கப்பட்டும், தீட்டப்பட்டும் காணப்படுகின்றன.



சென்னையை அடுத்துள்ள காஞ்சிபுரத்தின் அருகிலுள்ள கூரம் என்ற இடத்தில் கிடைத்த கூரச் செப்பேட்டில், முதலாம் பரமேசுவரன் என்ற பல்லவ மன்னன், வித்யா விநீத பல்லவ பரமேசுவர கிருகம் என்ற சிவன் கோயிலை கூரத்தில் கட்டியுள்ளான். இக்கோயிலில் பாரதம் வாசிக்க என அக்காலத்திய மணையிற் கோட்டத்தில் உள்ள பன்மா நாட்டில் பரமேசுவர மங்கலம் என்ற ஊரினை இருபத்தைந்து பங்குகளாக்கி அதில் ஒரு பங்கினைத் தானமளித்துள்ளான்.

கி.பி. 992-ஆம் ஆண்டில், சேர மன்னனான இரவி வர்ம பாஸ்கரன், மகாபாரதம் ஓதுவதற்காக தானம் அளித்த செய்தி, திருக்கதிதானம் என்ற ஊர்க்கல்வெட்டில் காணப்படுகிறது. மேலும் இவ்வாறு வழங்கப்படும் தானங்களை அவை வழங்கப்பட்ட காரணத்திற்காக மட்டுமே பயன்படுத்த வேண்டுமென்றும், அவ்வாறு பயன்படுத்தத் தவறினால் அபராதத் தொகையாக [illegible] 5 [illegible] என்றும் இக்கல்வெட்டில் [illegible] படுகின்றது.

கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் பாண்டிச்சேரிக்கு அருகிலுள்ள திருபுவனி என்ற ஊரில் இருந்த கல்விச்சாலையில் வேதங்களும், இதிகாசங்களும் கற்பிக்கப்பட்டுள்ளன. இங்கிருந்த ஆசிரியர்கள் இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை மாணவர்களுக்கு மட்டுமல்லாது பொதுமக்களும் அறியச்செய்ய வேண்டும் எனக் கட்டாயமாகக் கூறப்பட்ட செய்தி இவ்வூர்க் கல்வெட்டின் மூலம் தெரியவருகின்றது.

திருநெல்வேலி மாவட்டம், சேரன்மாதேவியில் உள்ள பாண்டிய மன்னன் குலசேகரனின் காலத்தில், மகாபாரதம் படிக்க வழங்கப்பட்ட கொடைக்கு 'மகாபாரத விருத்தி' என்ற பெயரே வழங்கப்பட்டுள்ளது. சில கல்வெட்டுக்களில் பாரதம் வாசிக்க வழங்கப்பட்ட கொடைகளுக்கு பாரதப்புரம் அல்லது பாரதப் பாங்கு என்றும் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வாறு வழங்கப்பட்ட கொடைகளுக்கு வரி வசூலிப்பிலிருந்து விலக்கும் அளிக்கப்பட்டிருந்தது எனவும் அறியப்படுகிறது.

தற்போதுபோல் அக்காலத்திய மக்களுக்குப் பொழுதுபோக்கு அம்சங்கள் மிகக் குறைவு. அவர்கள்தம் ஊரில் உள்ள கோயில்களில் நடைபெற்ற விழாக்களில், கலைநிகழ்ச்சிகளில், [illegible] மன்றங்களில், விளக்க [illegible] பங்கேற்கவும் [illegible] கேட்டு அறியவும் வேண்டிய சூழ்நிலை [illegible] இதிகாசங்களும், புராணங்களும் [illegible] தொடர்ந்து மக்களின் [illegible] நிலைத்திருக்க ஒரு காரணமாகக் கோயில்கள் திகழ்ந்துள்ளன என்றால் அது மிகையாகாது

**********

# செய்திச் சுருக்கம்

## இலவச கண் அறுவை சிகிச்சை முகாம்

கடந்த முப்பத்தினான்கு ஆண்டுகளாக தி.தி. தேவஸ்தானம் இலவச கண் அறுவை சிகிச்சை முகாமினை ஆண்டு தோறும் நடத்திவருகின்றது. அவ்வகையில் 35ஆவது கண் அறுவை சிகிச்சைமுகாம் ஒன்று சென்ற மாதம் 17, 18 தேதி களில் ஹைதராபாத் சரோஜினி கண் மருத்துவ மனை உதவியுடன் திருப்பதியில் செயல்பட்டது. டாக்டர் பி. ரங்கா ரெட்டி அவர்களின் மேற்பார்வையில் நடைபெற்ற இம்முகாமின்போது, 2000 நோயாளிகள் பரிசோதிக்கப்பட்டனர். 306 நோயாளிகளுக்கு அறுவை சிகிச்சை மேற்கொள்ளப்பட்டது. இதுபோது நோயாளிகளுக்கு இலவச உணவு, தங்கு வசதி, முக்குக்கண்ணுடிகள் வழுங்கப்பட்டன. மேலும் திருப்பதியில் 'கண் வங்கி' ஒன்று அமைக்கப்பட வேண்டியதன் அவசியமும் பேசப்பெற்றது. இம்முகாமின் போது, பல்வேறு நிலைகளில் தி.தி. தேவஸ்தான மருத்துவர்களான டாக்டர். வெங்கடலக்ஷ்மி, டாக்டர் வேணுகோபால் ரெட்டி ஆகியோர் பங்கேற்றனர்.

* * *

## சாந்தி யக்ஞம்

தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 'அத்புத சுதர்ஸன சாந்தி யக்ஞம்' ஒன்று சென்ற மாதம் ஆந்திரமாநிலம் விசாகப் பட்டணத்தில் முவ்வல பாளையம் எனும் இடத்திலுள்ள தி. தி. தேவஸ்தான திருமண மண்டப வளாகத்தில் மூன்று நாட்களுக்கு நடைபெற்றது. குற்ருலீச சுவாமிகள் ஸ்ரீஸ்ரீசிவ சிதானந்தா பாரதி சுவாமிகள் மற்றும் புஷ்பகிரி ஸ்ரீஸ்ரீ வித்யா நரசிம்ம பாரதி சுவாமிகள் ஆகியோரின் மேற்பார்வையில் நடைபெற்ற இவ்வேள்வியின்போது, தலா ரூ. 250/- செலுத்தி ஏராளமான பக்தர்கள் பங்கேற்றனர். மாலை வேளைகளில் ஸ்ரீசமுத்ரால லக்ஷ்மணய்யா நாயுடு, ஸ்ரீபாஷ்யம் அப்பளாசார்யுலு ஆகியோரின் சமயச் சொற்பொழிவுகள் ஆன்மீக விருந்தாக அமைந்தன. இதுபோது செயல்பட்ட தி.தி. தேவஸ்தான சமயநூல் விற்பனை அங்காடியில் சுமார் ஒரு இலட்சத்திற்கு மேலான நூல்கள் விற்பனையாயின.

* * *

## பிரம்மோத்ஸவம்

திருப்பதியிலிருந்து சுமார் எட்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஸ்ரீநிவாசா மங்காபுரம் எனும் கிராமத்திலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் சென்ற மாதம் 8-2-96 முதல் 17-2-96 வரை எந்த ஆண்டும் இல்லாத வகையில் வெகுச் சிறப்பாக நடைபெற்றது. இப்பத்துநாள் நிகழ்ச்சியின்போது, கோயிலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும் வண்ண விளக்குகளாலும்,



நறுமலர் அலங்காரங்களாலும், கடவுளர்களின் திருவுருவச் சித்திரங்களாலும் சூழப்பெற்று ஆன்மீக உணர்வு அலைகளை பரப்பின என்றே கூற வேண்டும். இந்நிகழ்ச்சிக்கு மகுடம் வைத்தாற்போன்று, 13-2-96 அன்று நடைபெற்ற 'கருட சேவை' கண்ணுக்கும் கருத்துக்கும் பெருவிருந்தாக அமைந்தது. அன்றுமாலை திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயிலிலிருந்து ஆண்டாள் சூடிய 'தோமாலை' (துளசி மாலை) கருட வாகனத்தை அலங்கரிக்க, தி.தி. தேவஸ்தான திருப்பதி இணைச்செயலாட்சித் தலைவர் திரு. சத்யநாராயணா அவர்கள் தலைமை தாங்க, திருவீதிவலமாக மங்காபுரத்துக் கோயிலுக்கு எடுத்து வரப்பட்டது. அன்று இரவு நடைபெற்ற கருடசேவை நிகழ்ச்சியினை ஆயிரக்கணக்கான பக்தர்கள் கண்டு களித்தனர். அதேபோன்று 16-2-96 அன்று நடைபெற்ற 'திருத்தேர்' நிகழ்ச்சி சுற்றியுள்ள கிராமங்களிலிருந்து வந்திருந்த மக்களுக்குப் பெருங் கருத்து விருந்தாக அமைந்தது. இப்பத்து நாள் பிரம்மோத்ஸவத்தின் போது, பக்தர்களுக்கும், யாத்திரிகர்களுக்கும் இலவச உணவு வழங்கப்பட்டது. கோயில் வளாகத்தில் காலையிலும் மாலையிலும் சமயச் சொற்பொழிவுகள், ஹரிகதை, 'புர்ர' கதை எனும் கிராமிய சமய நிகழ்ச்சிகள், இசைக் கச்சேரிகள் நடைபெற்றன.

* * *

## புதிய யானைகள்

கர்நாடக மாநில முதல்வர் திரு. எச்.டி தேவகௌடா அவர்கள் அண்மையில் தம் துணைவியாருடன் திருமலைககு வருகை புரிநதிருந்தார். அதுபோது கர்நாடக அரசு சார்பில் தி.தி. தேவஸ்தானததிற்கென பத்மா மற்றும் கணேஷா எனும் இரண்டு யானைகளைப் பரிசாக அளித்தார். மேலும கர்நாடக மாநில அரசின் வனத்துறை சார்பில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பல்வகையான செடிவகைளும் தேவஸ்தானத்திற்கு வழங்கப்பட்டன.

❖❖❖❖❖❖❖❖❖❖

## அர்ச்சனா அனந்த்தர தரிசனம்

திருமலைக் கோயிலில் நாளும் நடைபெறும் அர்ச்சனைக்குப் பிறகு அதாவது காலை 5-30 மணி அளவில், ஏழுமலையானைத் தரிசித்திடும் வகையில் 'அர்ச்சனா அனந்த்தர தரிசனம்' எனும் புதிய ஆர்ஜித சேவை 1-3-96 முதற்கொண்டு ஒரு பரிசோதனை அளவில், புகுத்தப்பட்டுள்ளது. இச்சேவை பற்றிய விவரங்கள் பின்வருமாறு:-

1) கட்டணம் ரூ. 100/- (நபர் ஒருவர்க்கு)

2) இச்சேவைக்கான சீட்டுகளை வாங்கிய பக்தர்கள், அர்ச்சனைக்காக கட்டணம் செலுத்தி பங்கேற்கும் பக்தர்களின் ஏழுமலையானின் தரிசனத்திற்குப் பிறகு, அதாவது காலை 5-30 மணி அளவில் அனுமதிக்கப்படுவர்.

3) இச்சேவைக்காகக் கோயிலில் ஒதுக்கப்படும் கால அளவு சுமார் 30 அல்லது 45 நிமிடங்களேயாகும்.

4) கோயிலில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளின் அவசியத்தைப் பொறுத்து, இச்சேவைக்கான அனுமதி சீட்டுகளின் விற்பனை ஒரு நாளைக்கோ அல்லது சில நாட்களுக்கோ நிறுத்தி வைக்கப்படலாம்.

5) இச்சேவைக்கான அனுமதிசீட்டுகள் நாள் முழுவதும் திருமலை விஜயா வங்கி விற்பனைக்கூடுகளில் விற்பனைக்குக்கிடைக்கும். நாள் ஒன்றிற்கு 750 சீட்டுகள் மட்டுமே விற்கப்படும்.

## மதிப்புரை

# கம்பர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றுண்டே!

ஆசிரியர்: டாக்டர் மா. வரதராஜன்,
கிடைக்குமிடம்: ராஜேஸ்வரி புத்தக நிலையம்,
22, 6-வது தெரு, பக்தவச்சலம் நகர், பழவந்தாங்கல், சென்னை-600114.
விலை ரூ. 50, பக்கங்கள் 276.

பக்தி இலக்கிய வரலாற்றில் நாயன்மார் ஆழ்வார்கள் பாடல்களுக்குப் பிறகு கம்பராமாயணம் பேரிடம் பெறுகின்றது. ஆழ்வார்களின் பாடல்களில் உள்ள நயங்களைச் சேர்த்துக் கம்பர் இயற்றிய இராமாயணம் வைணவ ஆசார்யரான ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்தில் திருவரங்கத்தில் அரங்கேற்றம் செய்யப்பட்டது என்பது வெள்ளிடைமலை.

இருப்பினும் கம்பர் காவியத்தில் நாட்டம் செலுத்திய தமிழ்ப்பேரறிஞர்களில் சிலர் கம்பர் காலத்தை ஒன்பதாம் நூற்றுண்டு என்றும் மற்றும் பலர் 12ம் நூற்றுண்டு என்றும் கூறி வந்தனர். இக்கால ஆராய்ச்சியில் வெற்றிபெற்று முப்பது தமிழறிஞர் புலவர் பெருமக்களின் உகப்புக்கும் இசைவுக்கும் பாத்திரமாகி, பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் ஆராய்ச்சியாளர்களும் வரவேற்கும் வகையில் கம்பர் காலம் கி.பி. 9-ம் நூற்றுண்டே என்ற நூலை இயற்றிய டாக்டர் மா. வரதராஜன் அவர்கள் மிகவும் பாராட்டுக்குறியவராவர்.

இந்நூல் உலக காப்பியங்களுள் தலைசிறந்தது கம்பர் காவியம் என்றும், கம்பராமாயணம் தமிழ் மொழியின் இதயம் என்றும், நாலாயிரதிவ்ய ப்ரபந்தத்தில் கம்பர் பாடல் இடம் பெற்றது என்றும், கம்பராமாயணம் அரங்கேற்றம் ஸ்ரீமந் நாதமுனிகள் முன்பே என்றும் பலபடியாக 22 தலைப்புகள் அடங்கிய கட்டுரை நூலாகத் திகழ்வது குறிப்பிடத்தக்கதாகும். மேலும் கல்வெட்டுக்கள், செப்புப்பட்டயங்கள், கோயிலொழுகு மற்றும் பல நூல்களைப்பயின்றும் இவ்வாசிரியர் கம்பர் காலத்தை 9ம் நூற்றுண்டே என்றும் முடிவு செய்துள்ளார்.

ஸ்ரீராமாநுஜர் காலத்துக்கு முன்பே கம்பர் வாழ்ந்தவர் என்பதை நிலைநாட்டும் வகையில் கம்பரது இராமாயண காப்புச் செய்யுளான 'உலகம் யாவையும்.....' என்ற பாடற்பொருளைத் தழுவியே ஸ்ரீராமாநுசர் தாம் அருளிய வடமொழி நூலான ஸ்ரீபாஷ்ய தொடக்கமான மங்கள ச்லோகத்தை 'அகிலபுவன...' என்று அருளினார் என்று குறிப்பிடுவது ஆசிரியர் தம் நுண்மான் நுழைபுலனை உணர்த்துவதாகும்.

இங்ஙனே 22 ஆதாரங்களோடு சுமார் 750 எடுத்துக் காட்டுகளும் கொண்ட இந்த நூல் கம்பரின் முழுமையான வாழ்க்கையைச் சித்தரிப்பதாக விளங்குகிறது.

கல்லூரிகள் மற்றும் பல்கலைக்கழக நூலகங்களில் இந்நூல் இடம்பெற்று ஆராய்ச்சியாளர்களுக்கும் அரிய விருந்தாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

டாக்டர் எம். வரதராஜன்,
திருப்பதி.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

## ஆலய அமைப்பும் ஆறு ஆதாரங்களும்

ஆலயத்தின்

| | | |
|---|---|---|
| கர்ப்பக்கிரகம் | -- | -மூலாதாரத்தையும் |
| அர்த்த மண்டபம் | -- | -சுவாதிஷ்டானத்தையும் |
| மகாமண்டபம் | -- | -மணிபூரகத்தையும் |
| ஸ்நான மண்டபம் | -- | -அனாகரத்தையும் |
| அலங்கார மண்டபம் | -- | -விசுத்தியையும் |
| சபா மண்டபம் | -- | -ஆக்ஞையையும் |

உணர்த்துகின்றன.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

